புதியது

பால் அடங்கிய
# ஃபாரெக்ஸ்
திட உணவு

# அதிக சுவையானது
# அதிக முழுமையானது




**நீங்கள் பாசத்துடன்
ஊட்டும் ஒவ்வொரு கவளமும்
உங்கள் பாப்பாவின்
வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரணசக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. ஒவ்வொரு கவளத்திலும் அதிக முழுமையான திட உணவு.

CLARION/B/GX/3/203 Tml

# தூக்கம் வருது, தூக்கம் வருது, படிக்க, படிக்க, தூக்கம் வருது!

தயாரிப்பு: தரஜா

ஆபீசிலே யாராவது தூங்கிறதையும் கண்டுக்காமல் இருந்தது தப்பா போயிடுத்து....

ஏன் சார்! என்ன ஆச்சு?

கொஞ்ச நேரம் முன்னாலே ஒரு கிளார்க் என் கிட்டே வந்து "கனவுகளும் அதன் பலன்களும்"ங்கிற புத்தகம் இருக்கா?ன்னு கேட்கிறான் சார்!















க்ளோஸ் அப்

# ஆந்திர முதல்வர் அவதார புருஷர்



அறுபதைத் தாண்டி விட்டாலும் டிரிம்மாக இருக்கிறார். சினிமாவில் இவரைத் தெய்வமாகப் பார்த்துப் பார்த்து இவரையே ஆந்திரதேசப்பாமரர்கள்அவதாரபுருஷராகக் கருதுவது ஒருபுறமிருக்க என். டி. ஆரே தம்மிடம் ஏதோ ஒரு தெய்வீக சக்தி இருப்பதாய் நம்புகிறார். என். டி. ஆருக்கு மேனகா காந்தி மீது ஒருவித பரிதாப உணர்வு உண்டு. தேர்தலின் போது யாருடன் கூட்டு வைத்துக் கொள்வார் என்பது சஸ்பென்ஸாய் இருந்த போது, அவரிடம் இதுபற்றிக் கேட்டேன். அவர் சொன்னது: ''கூட்டணியா? யாருடனும் இல்லை. ஆனாலும் மேனகாகாந்தி கட்சிக்கு 5 சீட் தரப்போகிறேன். பாவம், அந்தப் பரிதாபத்துக்குரிய இளம் விதவை.'' அப்படியே தந்தார்.

என் முதல் பேட்டியின் போது நான் என். டி. ஆரிடம் கண்ட முக்கியமான விஷயம், அவருக்கு அரசியலின் அடிப்படை விஷயங்கள் கூடத் தெரியவில்லை என்பதும், ஆனாலும் அவருக்கு ஜனங்களுக்கு நிறைய நல்லது செய்ய வேண்டும் என்ற ஆசை இருப்பதும் தான். சமீபத்திய சந்திப்புக்களின் போது, அவருக்கு அரசியல் அத்துப்படி ஆகிவிட்டதை உணர்ந்து கொண்டேன். எப்படிப்பட்ட கேள்விகள் கேட்டாலும், என். டி. ஆருக்கு எரிச்சல் வராது. கேள்வி புரியவில்லையெனில், புரியும்படி கேட்கச் சொல்லி, பதில் சொல்வார்.

என். டி. ஆர். தேர்தல் பிரச்சாரப் பயணம் செய்த போது, நானும்கூடவே பயணம் செய்தேன். அதேசமயம் இந்திரா காந்தியின் பிரச்சாரக் கூட்டங்களுக்கும் போனேன். பிரதமருக்கு வந்த கூட்டத்தைப் போல பல நூறு மடங்கு கூட்டத்தை, என். டி. ஆர். பெரிய கூட்டங்களில் பார்த்து வியந்து போனேன். வந்தவர்களில் வயது வித்தியாசமில்லை. எல்லாத் தரப்பு மக்களும்-வெயிலைப் பொருட்படுத்தாமல் கூடியிருந்தனர். மரக்கிளைகளிலும், வீடுகள் மேலும், கட்டிடங்கள், சுவர்கள் மீதும் நின்றும், உட்கார்ந்தும் அவர் பேச்சைக் கேட்டனர்.

பண்பாளர். இந்தச் சுற்றுப்பயணத்தின் போது அவ்வப்போது யாரையாவது அனுப்பி, எனக்கு எல்லாம் வசதியாய் இருக்கிறதா என்று விசாரிப்பார். கிராமப் பகுதி ஒன்றில் ஏகக் கூட்டம் காரணமாய், நான் கொஞ்சம் பின்தங்கிவிட, அவர் முன்னால் போய் விட்டார். எனக்கோ ரொம்பக் களைப்பு. எமப்பசி! சாப்பிட ஒன்றும் கிடைக்கவில்லை. தவித்துப் போய்விட்டேன். அந்தச் சமயத்தில் என். டி. ஆர்., என்னைத் தேடி, அழைத்து வர ஒருவரை அனுப்பிவிட்டார். தம்முடனேயே சாப்பிடச் சொன்னார்.

இப்படி என். டி. ஆருடன் கூடவே பல இடங்களுக்கும் போனதில், ஒரு சமயம், தெ. தே. கட்சியின் உள்ளூர் பிரமுகர்கள் சிலர், ''தலைவரின் பெண் என்ற முறையில் நீங்கள் ஏன் கூட்டங்களில் பேசக் கூடாது?'' என்று கேட்டனர். ''என்னை நீங்கள் தப்பாய்ப் புரிந்து கொண்டு விட்டீர்கள். நான் பத்திரிகை நிருபர்'' என்று விளக்கம் சொல்ல வேண்டியதாகி விட்டது.

தெலுங்கு தேச ஆட்சியின் 100 நாள் என்பது பற்றிய கவர் ஸ்டோரி எழுத ஹைதராபாத் போனேன். என். டி. ஆரின் அப்பாயின்ட்மென்ட் 9 மணிக்கு. பேட்டி முடித்துப் பகல் 12 மணி விமானத்தில் சென்னை திரும்ப டிக்கட் வைத்திருந்தேன். ஆனால் ஏதோ காரணங்களுக்காக 9 மணிக்கே பிளேன் புறப்படும் என்றார்கள். என்ன செய்வது என்று புரியவில்லை. காலை நந்நரைக்கு என். டி. ஆரின் செகரட்டரிக்குப் போன் செய்து, பிரச்சினையைச் சொன்னதும், அவர் முதல்வருடன் பேச, அவர் எந்தவித தடங்கலும் சொல்லாமல் 7 மணிக்கு அப்பாயின்ட்மென்ட் தந்தார். பேட்டியை முடித்துக் கொண்டு, விமானத்தைப்பிடித்துச் சென்னை வந்தேன்.

முதல்வரான பின் என். டி. ஆர். முதன் முதலில் பேட்டியளித்தது எனக்குத்தான். அவரது மனைவியைக் கூடப் பேட்டி கண்டிருக்கிறேன். ரொம்ப சிம்ப்பிளான பெண்மணி.

**அனிதா பிரதாப் சொல்ல எழுதியவர் எஸ். சந்திரமௌலி**

**அனிதா பிரதாப் புகைப்படம்: சேகர்**



# பொன் விழாக் காணும் ஜயேந்திரர்



ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் அபயஹஸ்தத்தில் அருளாசி வழங்கப்பட்டு நேபாளம் உட்பட பாரத தேசம் முழுவதும் யாத்திரை செய்து மக்களிடையே இந்து தர்மம் பற்றிய உணர்வுகளை எழுப்பிஅவர்களிடையே விழிப்புணர்வை ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஊட்டி வருகிறார்கள். ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் பீடமேறி முப்பதாண்டுகள் ஆகின்றன. 1984—ஆம் ஆண்டில் அவர்களுக்கு ஐம்பது வயது நிறைவடைகிறது. அவரது பாதங்களில் பணிந்து நமஸ்கரிக்கிறோம்.

ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் பொன் விழாவைக் கொண்டாடும் வகையில் கீழ்க்கண்ட பத்து நற்பணிகளை ஸ்ரீ ஆச்சார்ய ஸ்வாமிகளுடைய நல்லாசியுடனும் அனுமதியுடனும் நடத்த பொன்விழாக் கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது.

1. நம் நாட்டில் நாயன்மார்களால், ஆழ்வார்களால் பாடல் பெற்றவையும் வரலாற்றுப் புகழ் பெற்றவையுமான பாடல் பெற்ற ஸ்தலங்களில் மாவட்டத்திற்கு ஐந்து கோவில்கள் வீதம் மொத்தம் ஐம்பது கோவில்களில் கர்ப்பக்ருஹம், அர்த்த மண்டபம், மஹாமண்டபம், விமானம் வரை திருப்பணி செய்து அஷ்டபந்தன மருந்து சாத்தி கும்பாபிஷேகங்கள் செய்வது.

2. நித்திய வழிபாடுகள் கூட செய்ய முடியாத அளவிற்குப் பொருளாதாரத்தில் நலிவுற்ற கோவில்களில் மாவட்டத்திற்கு ஐந்து என்ற முறையில் தேர்ந்தெடுத்து அவற்றிற்கு நித்திய பூஜை நடத்துவதற்குத் தேவையான மூலதனத்திற்கு ஏற்பாடு செய்வது.

3. ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிச் செய்த ஐம்பது நூல்களைப் பொருளுடன் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடுவது.

4. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஐந்து இடங்களிலாவது தேவார திருவாசக ஸ்தோத்திர பாடசாலைகளை நிறுவுவது.

5. ஒரு கோவிலுக்கு இரண்டு வில்வக் கன்றுகள் வீதம் ஆயிரம் கோவில்களில் வில்வக் கன்றுகளை நட்டுக் காத்து வளர்ப்பது.

6. கல்லூரிகளிலும் , பள்ளிகளிலும் படிக்கும் மாணவ மாணவிகளுக்கு உதவ இந்து சமயம் இந்து தர்மத்தில் உள்ள நல்ல கோட்பாடுகளை விளக்கும் கட்டுரைகளைக் கொண்ட நூல் ஒன்றினை வெளியிடுவது. அதை மாணவ மாணவிகள் படிக்க வாய்ப்பு வழங்கும் வகையில் போட்டிகள் நடத்திப் பரிசுகளை வழங்குவது.

7. சமஸ்கிருதம், தத்துவம் (Philosophy) ஆகிய பிரிவுகளில் M. A. முதுகலைப் பட்டம் படிக்கும் மாணவ மாணவிகளை ஊக்குவிப்பதற்காக உதவித் தொகை வழங்குவது.

8. ஏழைகளுக்கும் நலிவுற்றோருக்கும் இலவச மருத்துவ உதவி அளிக்க ஐம்பது இடங்களைத் தேர்ந்தெடுத்து அங்கு மருத்துவ சாலைகளை நிறுவுவது.

9. வேத சாஸ்திர விற்பன்னர்கள் ஐம்பது பேர்களுக்குச் சன்மானம் வழங்குவது.

10. பசுக்களைப் போற்றிக் காத்து இரட்சிப்பதற்கு ஐம்பது கோ சம்ரட்சண சாலைகளை நிறுவுவது.

மேற்கூறிய பணிகள் சிறப்புற நடைபெறுவதற்கு நிதி தேவை. மெய்யன்பர்கள் பக்தகோடிகள் அனைவரும் தாராளமாகப் பல வகைகளிலும் பொருளுதவி செய்து ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளின் அனுக்ரஹத்திற்கும் அருளுக்கும் பாத்திரராகும்படி கேட்டுக் கொள்கிறோம். மேற்கூறிய பணிகளில் தங்களுக்கு எந்தக் கைங்கரியத்தில் ஈடுபட விருப்பமோ அவைகளைக் குறிப்பிட்டு எழுதி, அதற்கேற்ற நிதியுதவி செய்தாலும் அதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்படும். பொருளுதவி செய்பவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்குப் பணமாகவோ செக்காகவோ டிராப்டாகவோ அனுப்பும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். இந்த நன்கொடைக்கு வருமான வரி விலக்கு உண்டு.

**காரியதரிசி,**
**காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் பொன்விழாக் கமிட்டி,**

**ஸ்ரீ சங்கரா மேல்நிலைப்பள்ளி,**
**9, வசந்தா பிரஸ் சாலை,**
**அடையாறு, சென்னை-600020.**

மேலட்டையில் பொன் விழா காணும் ஜெயேந்திரரும் பொன் தகட்டில் காஞ்சி காமாட்சியும். வண்ணப்படங்கள்:

**ஓம் சுப்பிரமணியம்**

# கொள்ளு என்றாலே வாயைத் திற!

## வட்டமேஜை

● 8.7.84 இதழில் வெளியான ''தன்னை அடக்கும் தண்ட''த்தில் தண்டத்தின் மேல் சுற்றிய துணி கௌபீனம் எனக் காண்பது சரியல்ல. அது ''ஜல பவித்திரம்'' எனப்படுவது. துறவிகள் இந்த ஜல பவித்ரத்தை மடித்து மோதிர விரலில் சுற்றிக் கொண்டே ஆசமனம் செய்வர்.
ஸ்ரீரங்கம்
ஆ. ஸ்ரீநிவாஸ ராகவன்.

(கௌபீனத்தையே தண்டத்தில் சுற்றிக் கொள்ளும் துறவு மரபும் உண்டு. பழநியாண்டவர் என்று பொது வழக்கில் கூறும் ஸ்கந்தமூர்த்திக்கான குமார தந்திரத்தின் தியானச்லோகத்தில் ''கௌபீன - தண்டதர தக்ஷிண ஹஸ்தம்'' என்றே உள்ளது. இதைத் தமிழில் தணிகைப் புராணம், ''கோவணந் தண்டு கைவாம் வயத்தின் அமைத்தருளி'' என்னும்.—
ரா. கணபதி)

● 'ஐயோ பாவம் ஆலயங்கள்' என்ற தலைப்பில் கட்டுரையைக் கண்டேன். விழுப்புரத்தை அடுத்த வளவனூரில் குமாரகுப்பம் அருள்மிகு பாடலீசுவரர் சன்னதியில் உள்ள அர்ச்சகருக்கும் மற்ற சிப்பந்திகளுக்கும் கடந்த ஒன்றரை வருட காலத்துக்கு மேலாக மாத ஊதியம் வழங்கப்படவில்லை. அறங்காவலரைக் கேட்டால் குத்தகை வரவில்லையெனச் சொல்கிறார். கமிஷனரைக் கேட்டால் கஜானாவில் பணமில்லை என்று கூறுகிறார். அந்த அர்ச்சகர் வீட்டு வாடகைக்குக் கூடப் பணம் தர முடியாமல் கோவிலிலேயே மனைவி குழந்தைகளுடன் குடியிருக்கிறார். பக்தர்கள் தரும் காணிக்கையில் காலம் ஓட்டி வருகிறார். இப்படி எத்தனையோ அவலங்கள் ஆலயங்களில்.
நாவரையூர். ஜெயலக்ஷ்மி.

● என்னைப் பற்றிய கட்டுரையில் சுப்ரமணியம் குறிப்பிடத் தவறிய ஒரு முக்கியமான விஷயம்:
ஸ்ரீவத்ஸன் ஆரம்பத்தில் என்னிடம் கற்றுக் கொண்ட போதிலும் அவரை முழுமையாக உருவாக்கிப் பல வருடங்கள் கற்றுக் கொடுத்து அரசாங்க உபகாரச் சம்பளமும் வாங்கித் தந்த பெருமை எனது குருவாகிய திரு. பூவாளூர் வெங்கட்ராமன் அவர்களையே சாரும்.
சென்னை—18
திருச்சி சங்கரன்.

● பலருக்குப் புரியாத ஸ்வராஜ் பால் விவகாரத்தைப் புரிய வைத்ததற்கு நன்றி. சமீபத்திய செய்தி: ஜூன் மாதம் நடந்த வாக்கெடுப்பின் முடிவைத் தெரிவித்தது. எஸ்கார்ட்ஸின் டைரக்டர்கள் குழுவை மாற்ற தீர்மானம் கொண்டு வரப்பட்டு சுப்ரீம் கோர்ட்டின் அனுமதி எதிர்பார்க்கப்படுகிறது. இதில் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால் குறைந்த அளவு ஷேர்களை உடைய பெரும்பான்மை பங்குதாரர்கள் இத்தீர்மானத்தை எதிர்த்துள்ளனர். எனினும் அதிக அளவு ஷேர் உள்ள சிறுபான்மையினரின் ஆதரவால் இத்தீர்மானம் நிறைவேறியுள்ளது.
சென்னை—41 பி. கணேசன்.

● தம்பரிடம் நல்ல பழக்கங்களை வாசகர் பகுதியில்



படித்ததும் இன்றைய உலகில் கூட இப்படிப்பட்ட சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள் என்ற மனஆறுதல்.
சென்னை -14
ஜயராஜு. எஸ். வாசுதேவன்.

● நேரம் நல்ல நேரம் வானொலி நிகழ்ச்சியில் இயக்குனர் எஸ். பி. முத்துராமன் வாசகர்களின் கேள்விகளுக்குப் பதில் அளித்ததைக் கேட்டேன். புதுமை கலை விறுவிறுப்பு மூன்றின் கலவையாக நிகழ்ச்சி அமைந்திருந்தது. பத்திரிகை உலகில் புதுமையான எல்லைகளைத் தொட்டு வரும் உங்களின் ப(ர)ணி பாராட்டுக்குரியது.
நெல்லை சேலம் கோ. பாபு.

● பொற்கோவில் வளாகத்தில் நாட்டின் ஒருமைப்பாட்டுக்காக உயிர்த் தியாகம் செய்த ராணுவ வீரர் எம். சுப்புசாமியின் குடும்பத்திற்கு உதவிய இரக்கமுள்ள இதயங்களுக்கு எனது இதய பூர்வமான பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.
குளச்சல்
எம். எம். இப்ராஹீம்

● தியேட்டர் உரிமையாளர்கள் கட்டணத்தை உயர்த்தட்டும் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் தியேட்டருக்குள் 'கழிப்பிடம்' என்று ஒன்று இருக்கிறதே அதைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டாமா? மின்விசிறி, எனி முதலியன சரியாக வேண்டாமா? கொள்ளு என்றால் வாயைத் திறப்பதும் கடிவாளம் என்றால் வாயை மூடுவதும் சரியா?
கீழ்கோவளவேடு
நல்லாலம் காசிதாசன்.

(கடிதம் சுருக்கப் பெறுகிறது)

"ஓங்க்" — வயிற்றிலிருந்து உற்பத்தியான சத்தம் தொண்டையில் சிக்கி உருக்குலைந்து திணறலோடு வெளிவர... சின்னச் சின்ன வலிப்புக்களுடன் சில நிமிடங்களில் அடங்கினாள் அவள்...

பார்வதம், வயது முப்பத்து ஒன்பது. அவள் அடங்கியவுடன் அவளது தொண்டையிலிருந்து தம கைக்கு விடுதலை கொடுத்து, கழுத்தில் சின்னதாகக்கருக்கிட்டுக் கொண்டார் அவர்...

டாக்டர் ராகவன் சராசரி உயரத்தை விடக் குள்ளமாக இருந்தார். நாற்பத்தி எட்டாவது வயதை உதறிப் பத்து நாட்களே ஆகியிருந்தன. சற்று பூசினாற்போல் உடம்பு. இறுக்கமான சட்டையையும் மீறி இளம் தொப்பை சிறிது வழிந்தது.

ஆயிற்று மனைவியைக் கொலை செய்தாகி விட்டது. சடலத்தைப் பார்த்துக் கேலியாகச் சிரித்தார். கடந்த ஒரு மாதமாக நடந்த சம்பவங்கள் "ப்ளாஷ்பாக்காக" முன்னே வர...

டாக்டர் ராகவன் ஒரு ஜாலி டைப். கிட்டத்தட்ட அரை நூறை அவர் நெருங்கி விட்டாலும், பெண் சபலம் மிக அதிகம் அவருக்கு. பதினெட்டு வயதுப் பெண்முதல் நாற்பத்து ஐந்து வயது வரை உள்ள பெண்களை அயர வைக்கும் ஆண்மை அவரிடம் இருந்தது. பார்வதம் வெகு சீக்கிரம் அவருக்கு அலுத்து விடவே புதிய புதிய பெண்களைத் தேட ஆரம்பித்தார். கார்ல் கேர்ள்களை அவர் விரும்புவதில்லை.

பணக்கார இடங்களிலும், புதிது புதிதாகப் பெண்கள் புழங்கும் இடங்களிலுமே தம் தொடர்பை வைத்துக் கொண்டார்.

இரண்டு வாரங்களுக்கு முன்பு நடைபெற்ற பார்வதத்தின் பிறந்த நாளுக்கு வந்திருந்த பார்வதத்தின் தோழி மேரி லாரன்ஸைத் தம் ஆண்மையால் வீழ்த்த— அது தெரிந்தவுடன் பார்வதம் உறைந்து விட்டாள். பின்னர் நேருக்கு நேர் சீறினாள்.

"இனிமே நீங்க இந்த மாதிரி செயல்களை செய்யறதானா... என் அண்ணன் லாயர்— வெங்கடேஸ்வரன்கிட்டே சொல்லிடிவோர்ஸ் வாங்கிடுவேன்... சே! நீங்களும் ஒரு ஆம்பிளையா...?"

அதிர்ந்தார் முதன் முறையாக...பார்வதம் செய்தாலும் செய்வாள்... தன் கௌரவம், மானம் யாவும் சந்தி சிரிக்கும், தடையாக இருக்கும் பார்வதத்தைக் கொலை செய்தால் என்னவென்று தோன்றியது...

"சரி" என்று மனம் ஆமோதிக்கத் திட்டம் தீட்டத் தொடங்கினார்...

வெள்ளிக்கிழமை அவர் மகாபலி



புறம் சென்று வருவது வழக்கம். ஏனென்றால் அங்கு ஒரு பேஷண்ட் டாக்டருக்கு இருக்கிறார். அங்கு மாலை சென்று மறுநாள் சனி மதியமே தமது டிஸ்பென்சரிக்கு வருவார். அங்கே அவருக்கு ஒரு சின்ன வீடும், காரும் உண்டு. இத்தனையும் எல்லோருக்கும் தெரியும். அந்த நாளைத் தேர்ந்தெடுத்தார்.

வெள்ளிக்கிழமை தாம் அங்கிருந்ததற்கான அத்தாட்சியைத் தயாரித்தார்.

இரவு பன்னிரண்டு மணி அளவில் யாருக்கும் தெரியாமல் தம் காரை எடுத்துக் கொண்டு கிளம்ப... அரை மணி நேரத்தில் ஜி. கே. எக்ஸ்டென்ஷனில் இருந்தார். ஒரு தேர்ந்த கொலைகாரனைப் போல இயங்கி...

கொலை செய்தார்...

கையிலிருந்த கிளவுஸைச் சரி செய்து கொண்டார். அவளை இழுத்துப் போய்ச் சமையலறையில் தாறுமாறாகக் கிடத்தினார்.

அவள் காப்பி போடுவது போல ஏற்பாடுகள் செய்தார். பால் வரும்வரை காத்திருந்து, அவன் வாசலில் உள்ள பாக்ஸில் போட்டுவிட்டுப் போகும் வரை காத்திருந்து கைரேகைப்படாமல் அதனை எடுத்து வந்து சமையலறையில் வைத்து....

காஸைத் திறந்து விட்டு...

தன் தடயங்கள் ஒன்றையும் விடாமல் மிகச்சுத்தமாக இயங்கி...வெளியேறிக்குச்சி கொளுத்தி சன்னல் வழியே விட்டெறிந்து விட்டு...

கவனமாகப் புற்களின் மேல் அடியெடுத்து வைத்து... தம் காரை அடைந்து...கிளப்பி மஹாபலிபுர காட்டேஜை அடைந்தபோது..

பேப்பர் போட வந்த பையன் வீடு எரிவது கண்டு அருகிலிருந்த சப்-போலீஸ் ஸ்டேஷனை அணுகும்போது...

மணி காலை 5.00

**ப**டுக்கையில் புரண்டு படுத்தார் ராகவன். அருகே நர்ஸ் நீலா...

எதிரே என்லார்ஜ் செய்யப்பட்ட படத்தில் பார்வதம் நெற்றியில் சந்தனப்பொட்டுடனும் மல்லிகைச் சரத்துடனும் சிரித்துக் கொண்டு இருந்தாள்.

இரண்டு மாதங்கள் நடந்தது விசாரணை; விசாரணை நடத்திய இன்ஸ்பெக்டர் இதை ''விபத்து'' என்று உறுதி பண்ணினார்; மைத்துனன் பரிதாபப்பட்டு டாக்டர் ராகவனுக்கு ஆறுதல் கூறினான்...

மணியைப் பார்த்தார். 4.30 என்றது டிஜிடல். வாய் காப்பி கேட்டது.

''நீலா எழுப்பச் சொன்னேனே...'' நீலாவை எழுப்பினார்.

எழுந்தவள், ''எங்க அண்ணன்கிட்டேயிருந்து போன் ஏதாவது வந்ததா...?'' என்றாள்.

''இல்லை நீலா! ஏன்?'' என்றார் ராகவன்.

''இல்லே அண்ணிக்கு இது பிரசவ டைம் எனக்கு போன் பண்றேன்னார்...''

முகத்தைக் கழுவிக் கொண்டு புடவையைத் திருத்திக் கொண்டாள். ''இது என்ன சமையல் கட்டில் புதுசா...?''

''ஒன்றுமில்லே நீலா! பார்வதம் அவளுக்கு அங்கே சின்ன டிரஸ்ஸிங் அலமாரி வச்சிக்கிட்டா! அவ ஞாபகார்த்தமா அவளுக்குப் பிடித்த செண்ட், லோஷன் எல்லாம், வீட்டைப் புதுப்பிச்ச போது வாங்கி வைத்தது.''

காஸைப் பற்ற வைத்து டிகாக்ஷன் போட்டவள், பால் வராததால் காஸை ஆப் செய்தாள்.

''ஏன் டாக்டர் இன்னிக்கு பால் லேட்?''

அவருக்கு விடை தெரியவில்லை.

பால் வந்ததும் முதலில் காஸ் கும்மிழைத் திறந்தவள், லைட்டரை எடுக்கும் போது டாக்டர் கூப்பிட்டார்.

''நீலா உனக்கு போன்!...''

அவசரத்துடன்வந்தவள் திறந்த டிரஸ்ஸிங் அலமாரியில் . இடிக்க... மூன்று உயர்தர செண்ட் பாட்டில்கள் ஒன்றோடு ஒன்று மோதிக் கீழே விழுந்து சிதற...

சமையலறையில் கதம்பமான செண்ட் வாசனை நிரப்பிற்று.

போனில் தகவலைக் கேட்டவள்.... ''டாக்டர் அண்ணிக்கு சீரியஸாம்.... வரேன்...'' என்றவாறு விரைந்தாள்.

அரைமணி நேரம் அவளோடு ஓடிப் போக...

சோர்வுடன் எழுந்தார். சமையலறையில் சிதறியிருந்த கண்ணாடி துண்டுகளை வெளியில் எறிந்தார்.

காஸ் கொஞ்சம் கொஞ்சமாகச் சமையலறையை நிரப்ப... அதன் வாசனை செண்ட்டில் அமிழ்ந்து போயிற்று.

காஸைப் பற்ற வைக்கும் போது தமக்குள் சொல்லிக் கொண்டார்.

''பார்வதம்! என்ன இருந்தாலும் நான் ரொம்ப ஜாக்கிரதை தெரியுமா? லைட்டரை முதல்லே பத்த வச்சிட்டு பின்னாடிதான் கும்மிழைத் திருகுவேன்...''

கேலிப்புன்னகையுடன் லைட்டரைப் பற்ற வைக்க...

''பனிச்''சென்று தோன்றிய சுடர் காற்றோடு வியாபித்திருந்த வாயுவுடன் காதலோடு சங்கமிக்க...

மீண்டும் ஒருமுறை அந்த வீடு எரிய ஆரம்பித்தது!

நா. சுரேஷ்
பி.எஸ்ஸி. இரண்டாம் ஆண்டு (புவியியல்)
மன்னர் சரபோஜி அரசினர் கல்லூரி
தஞ்சாவூர்

---

## புதுக்கவிதை

இலக்கணத் தடையேதும்
இல்லாத இந்த
இலக்கியச் சர்க்கரைப் பந்தலில்
எப்போதும்—
எறும்புகளின் கூட்டம்.

எம். வி. குமார்,
பி.எஸ்ஸி மூன்றாமாண்டு
அரசு சித்த மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை—627 002.

# புஜங்காசனம்

"ஒரு பெண்மணி வந்தார். சுமார் 30–32 வயது இருக்கலாம். அவருக்குச் சமீபத்தில் தான் ஸிஸேரியன் ஆபரேஷன் ஆகியிருந்தது. உடம்பில் எக்கச்சக்கமாகக் கொழுப்புச் சேர்ந்து சதை போட்டு விட்டது. அறுபத்தைந்து கிலோ இருந்தார். இவருக்கு யோகாசனப் பயிற்சியளித்தோம். மூன்று மாதப் பயிற்சியில் ஆறு, ஏழு கிலோ எடையைக் குறைக்க முடிந்தது. ஆறாவது மாதம் பயிற்சி நிறைவடைந்த போது, பன்னிரண்டு கிலோ எடையை விலக்கிச் சமநிலை அடைந்திருந்தார்" என்கிறார், திரு. வி. எஸ். உதயகுமார்.

சென்னை அண்ணாசாலையிலுள்ள எக்ஸ்பிரஸ் எஸ்டேட்ஸ் கட்டிடத்தில் யோகா பிரதர்ஹூட் அமைப்பின் தலைமை யோகாசனப் பயிற்சி ஆசிரியர் இவர்.

டாக்டர்கள் பிரிஸ்கிரிப்ஷன் தருகிற மாதிரி இன்ன இன்ன நோய்கள் இருந்தால், என்ன மாதிரி யோகாசனங்கள் தேவை என்று நிர்ணயம் செய்து, பயிற்சி தருகிறார்கள். நீரிழிவு நோய், இருதய நோய், ஆஸ்த்மா, சுவாசக் கோளாறுகள், இரத்த அழுத்த நோய் என்று பல பிரிவுகளில் டாக்டர் இருவேங்கடம், டாக்டர் செளராஜன் டாக்டர் யு. முகம்மது போன்றவர்களின் கூட்டுறவுடன் குறுகிய காலப் பயிற்சி முகாம்களையும் இவர்கள் நடத்தியிருக்கிறார்கள். ஞாயிற்றுக்கிழமைகளில்காலை 7.30 மணிக்கு இலவசமாகவும் பொது மக்களுக்கு யோகப்பயிற்சி தரப்படுகிறது.

**ஆரோக்கியம் காக்க ஆசனம் பழகுவது வேறு. நோய் குணப்படுத்தப் பழகுவது வேறு.** பின்னதற்கு நிபுணர்களின் மேற்பார்வையில் செய்வது நலம் — முக்கியமாக ஆபரேஷன் செய்து கொண்டவர்கள்.

புஜங்காசனம், சலபாசனம், தனுராசனம் போன்றவை சதை போட்டு விட்டவர்களுக்கு எடை குறைக்க உதவும். சராசரி உடலமைப்பு கொண்டவர்களின் தேகம் பருமனாகாமல் பாதுகாத்துத் தரும்.

சுவாசக் கோளாறுகளை நீக்கி ஒழுங்கு செய்யவும், கூன் விழாமல் தடுக்கவும், தோள பகுதியில் வலியேற்படுவதைப் போக்கவும், புஜங்காசனம் உதவுகிறது. முக்கியமாகப் பெண்களுக்கு ஏற்படக் கூடிய மாதவிலக்குக் கோளாறுகளை புஜங்காஸனம் குணப்படுத்தும். ஆஸ்த்மா நோய் உள்ளவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம். தைராய்டு சுரப்பிகள் சரிவர இயங்கவும், பொதுவாக முதுகுத் தண்டின் பலமான வளையும் தன்மையைச் சீராக வைத்திருக்கவும் இது உதவுகிறது. குடலில் வாயுத் தொல்லை ஏற்பட்டால் நீக்கி, உற்சாகத்தை அதிகப்படுத்துகிறது.

**பயிற்சி முறை:**

சராசரி ஆரோக்கிய நிலையில் இருப்பவர்கள் இதைப் படித்துப் பயிற்சி மேற்கொள்ளலாம். சென்ற இதழில் கூறப்பட்ட பொதுவான விதிகள் கவனத்தில் இருக்க வேண்டும். **காலைக் கடன்களை முடித்து வயிறு காலியாக இருக்கும் நேரமே ஆசனங்கள் பழகச் சிறந்தது.**

தயார் நிலையில், நன்றாகக் கால்களை நீட்டி, விரிப்பின் மீது குப்புறப்படுக்கவும். வயிறு, மார்பு முகம் எல்லாம் நேராகத் தரையில் படிந்திருக்க வேண்டும்.

உள்ளங்கைகளை மார்புக்கு அருகில் தரையில் ஊன்றிக் கொள்ள வேண்டும். முழங்கைகள் உடம்பை ஒட்டினாற் போல் மேல் நோக்கி உயர்ந்திருக்க வேண்டும். கால்கள் இரண்டும் சேர்ந்தே இருக்கவேண்டும் கால் கட்டை. விரல்கள் பின்னோக்கி நீண்டிருக்க வேண்டும்.

பயிற்சி. முறையில், தலையை மெல்ல உயர்த்தி மேலே தூக்க வேண்டும், பிறகு நெஞ்சையும் உயர்த்த வேண்டும். வயிறு வரை மெல்ல உயர்த்திக் கொண்டே போக வேண்டும்.



இறுதி நிலையில், தலையை நிமிர்த்தி, முழங்கைகளை உடம்போடு ஒட்டிவைத்து, தோள் பகுதியைப் பின்னால் தள்ளி, மார்பை விரித்துக் கொள்ள வேண்டும். கால்கள் ஒன்றாக இணைந்தும், கால் கட்டை விரல்கள் பின்னோக்கி நீண்டும் இருக்க வேண்டும்.

குறைந்த பட்சம், முப்பது செகண்டுகள் இந்த நிலையில் இருக்க வேண்டும். அதிக பட்சமாக ஒன்றரை அல்லது 2 நிமிடங்கள் வரை இருக்கலாம். அதன் பிறகு நிதானமாக, முதலில் வயிறு, அப்புறம் மார்பு என்று தரையில் படிய வைத்து, முகத்தையும் தரைக்குக் கொண்டுவந்து, கைகளை விலக்கி உடம்போடு பக்கவாட்டில் நீட்டி ஆரம்ப நிலைக்கு வந்து ஓய்வு கொள்ளலாம். இந்த ஆசனத்தை இதேபோல் இரண்டு முறை செய்ய வேண்டும். ஆசன நிலையில் சாதாரணமான முறையில் சுவாசிக்க வேண்டும்.

பேட்டிக் கட்டுரை: **சுப்ரபாலன்**

படத்தில் குமாரி **ஆஷா**

புகைப்படம்: **தாமோதரன்**

# ஒலிம்பிக் ஸீஸன்

பிரச்னைகள்

இந்தா, பிடியுங்க 'போல்'! இதை வெச்சுக்கிட்டு தாண்டிக் காண்பியுங்க!

திவாரி

உ.பி. முதல்வர் பதவி

பாவ மனுஷன்! நிறையத் தான் 'கோல்' போடுறார்!.. எல்லாம் ஸேம் ஸைட் கோல்!

எல்-டி-எஃப்

ஜிம்னாஸ்டிக்ஸ்

கர்நாடகா மந்திரிகள் ராஜினாமா

வெரி வெரி புவர் பர்ஃபாமன்ஸ்!.. என்னதான் இருந்தாலும் நான் கோச் பண்ணின காஷ்மீர் டீம் மாதிரி ஆகுமா?

ஜக் மோகன்

# கல்கி



1984 ஆகஸ்டு 12
மலர் : 43 இதழ் : 2
ரக்தாக்ஷி ஆடி 28




# முதல் தமிழர்!

**து**ணை ஜனாதிபதி பதவி ஏற்கும் முதல் தமிழராகிறார் ஆர். வி. நமது இதயபூர்வமான நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்:

பார்க்கப் போனால் ஜனாதிபதி பதவியை விடவும் துணை ஜனாதிபதி பதவி பெருமை மிக்கது. ஜனாதிபதி நமது அரசியல் அமைப்பில் வெறும் ரப்பர் ஸ்டாம்ப்தான். ஆனால் துணை ஜனாதிபதி ராஜ்யசபையின் அக்கிராசனராகவும் விளங்கிக் கட்சிக் கண்ணோட்டமின்றியும் விருப்பு வெறுப் பின்றியும் செயலாற்றி ஜனநாயகம் தழைக்க உதவ வேண்டிய பெரும் பொறுப்பில் இருக்கிறார்.

வழக்கறிஞராக வாழ்க்கையைத் தொடங்கிய ஆர். வி. காங்கிரஸ் கட்சியின் கீழ் தொழிற்சங்க இயக்கத்தை அமைப்பதில் ஈடுபட்டார். தொழி லாளர் நலனுக்குப் பாடுபட்ட அதேநேரத்தில் தொழில் வளப்பெருக்கத்துக்கு இடையூறு இன்றியும் கவனித்துக் கொண்ட விதத்தால் முதலாளி – தொழி லாளி ஆகிய இருதரப்பினரது நன்றிக்கும் பாராட்டுதலுக்கும் உரியவரானார். இவர் ஆற்றலை உணர்ந்து தொழில்துறை அமைச்சர் பதவி தந்து கௌரவித் தார் காமராஜர். அவர் கணிப்பு எவ்வளவு சரியானது என்பதை நிரூபிப் பதே போலத் தமிழகத்தைத் தொழில்வளத்தில் இரண்டாவது இடம்பெறச் செய்தார் ஆர். வி.

தமிழகத்தில் தி. மு. க. அலை வீசியபோது தோல்வி கண்ட ஆர்.வி., திட்டக் கமிஷன் உறுப்பினராகவும், ஐ. நா. சபை, உலக வங்கி போன்ற சர்வதேச ஸ்தாபனங்களுடன் தொடர்பு கொண்டும் சிறப்புப்பணிகள் ஆற்றினார்.

காசா சுப்பாராவ் அவர்களால் தோற்றுவிக்கப்பட்டதும் கல்கி நிறு வனத்தைச் சேர்ந்ததும் ராஜாஜியின் எழுத்துக்களைத் தாங்கிப் பெருமையுற்றது மான சுயராஜ்யா பத்திரிகையில் க. சந்தானத்துக்குப் பிறகு ஆசிரியர் பொறுப்பேற்றார் ஆர். வி. எமர்ஜென்ஸி அறிவிக்கப்பட்டபோது பத்திரிகைத் தணிக்கையை எதிர்த்து வழக்குத் தொடுத்து ஒரு சுயராஜ்யா இதழை வெளியிட உயர்நீதி மன்ற அனுமதியும் பெற்ற ஆர். வி., பின்னால் படிப்படி யாக மனம் மாறி, கடைசியில் தேர்தல் அறிவிக்கப்பட்டதுபோது 'இந்திரா காந்திக்கு வோட்டளியுங்கள்' என்றே சுயராஜ்யாவில் எழுதிவிட்டு அப் பத்திரிகையின் ஆசிரியர் பதவியையும் துறந்தார். இது ரொம்பப் பேருக்கு அதிர்ச்சி அளித்ததென்றால் தேர்தல் களத்தில் குதித்த அவர், 'எனது தராசில் ஒரு தட்டில் எம். ஜி. ஆரும், மறுதட்டில் காஞ்சி முனிவரும் சமஎடையில் உள்ளனர்' எனப்பேசியது அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாக இருந்தது.

இந்திராகாந்திக்கு இக்கட்டான நேரத்தில் பக்கபலமாக இருந்தது வீண்போகவில்லை. இந்திராகாந்தி மறுபடி பதவிக்கு வந்ததும் ஆர். விக்கு அமைச்சரவையில் இடம் கிடைத்தது. தொழில் அமைச்சராக ஆசைப்பட்ட அவரிடம் நிதி இலாகாவை வழங்கினார் பிரதமர். அந்தப் பதவியிலும் சரி, அடுத்து பாதுகாப்பு அமைச்சர் என்ற முறையிலும் சரி, ஆர். வி. யால் தமது முழுத்திறமையையும் காட்டிப் பிரகாசிக்க முடியவில்லை. இதற்குக் காரணம் அவர் தமது ஞானத்தையும் அனுபவ ஆற்றலையும் பூரண சுதந்திரத்துடன் பிரயோகிக்க முடியாமல் ஜனநாயக சோஷலிஸம் என்ற மாயக் கொள்கையில் சிக்கி அந்தக் குறுகிய வட்டத்துக்குள் செயல்பட நேர்ந்ததுதான்.

துணை ஜனாதிபதி என்ற அளவிலும் ராஜ்யசபையின் அக்கிராசனர் என்ற முறையிலும் ஆர். வி. இந்தக் குறுகிய வட்டத்திலிருந்து வெளிப் போந்து சுயம்பிரகாசராய் ஜொலித்துத் தமிழகத்துக்குப் பெருமை சேர்க் கட்டும்.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# நெருப்பு மலர்

**இந்துமதி**

**சென்ற வாரம்:**

ருத்திகாவின் அன்னை, புவனேசுவரி நாட்டிய நிகழ்ச்சிகளுக்குப் பின்பாட்டுப் பாடுபவள். விதவை. சக கலைஞர்களின் வற்புறுத்தலினால் பொட்டிட்டும் பட்டுப்புடவை உடுத்தவும் வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகிறாள்.

ருத்திகாவின் மேல் படிப்பைத் தொடர அவளை டெல்லிக்கு அனுப்ப முடிவெடுக்கிறாள் புவனேசுவரி. சென்னையில் எத்தனையோ கல்லூரிகள் இருக்க அன்னை தன்னைப் புதுடில்லிக்கு அனுப்புவது ருத்திகாவுக்கு வியப்பைத் தருகிறது.

தமிழ்நாடு எக்ஸ்பிரஸில் புதுடில்லிக்குப் பயணமாகும் தன் புதல்வியிடம் 'விஷ்ணு பிரசாத்' என்பவரின் டில்லி விலாசத்தைத் தருகிறாள் புவனேசுவரி. ருத்திகாவிடம் எந்த உதவிக்கும் அவரை நாடலாம் என்று ரயில் புறப்படும் சமயத்தில் தெரிவிக்கிறாள்! விலாச அட்டையைக் கைப்பைக்குள் வைத்து நிமிரும் போது எதிர் சீட்டில் ஓர் இளைஞன் வந்து அமர்கிறான்.

## 2

'யார் இவன்...' என்ற கேள்வி மனத்தை ஆழமாய் நெருட, ஒரு விநாடி அவனையே பார்த்தாள் ருத்திகா. நல்ல உயரமாக இருந்தான் அவன். கைவிரல்களும், முகமும், காது மடல்களும் அசாதாரணச் சிவப்பில் மின்னின. அவளும் வெள்ளை தான் ஆனால் இது போன்ற சிவப்பு கலந்த வெண்மையில்லை. தென்னம் பூ மாதிரி மஞ்சள் சேர்ந்த வெண்மை. அவளும் உயரம்தான். ஆனால் அவ்வளவு உயரமில்லை. எழுந்து நின்றால் அவள் அவனின் தோளுக்குவரக் கூடும். அல்லது சற்றுக் குறைவாகக்கூட இருக்கலாம். நாசியும், கண்களும் கிரேக்கர்களையும், ரோமானியர்களையும் நினைவு படுத்த, அடர்த்தியான மீசை வைத்துக்கொண்டிருந்தான். சாதாரணமாக அந்த முகத்திற்கும், தோற்றத்தின் கம்பீரத்திற்கும் மீசை அந்நியமாக இருந்திருக்கவேண்டும். ஆனால் அவனுக்கு இயல்பாகப் பொருந்தியிருந்தது. தலைமுடி மிகச் சிறிதாய் நறுங்க வெட்டப் பட்டிருந்த விதத்தில் அவன் ராணுவத்திலோ, விமானம் அல்லது கடற்படையிலோ பணிபுரிபவனாக இருக்கலாம் என்பதை அனுமானித்து, உடனே தன் கீழ் உதட்டை லேசாய்க் கடித்துக் கொண்டாள். அறிமுகமற்ற யாரோ ஒருவனைப் பற்றி இவ்வளவு ஆராய்ச்சி ஏதற்காக என்று தோன்றிற்று. ரயிலில் எதிர் சீட்டில் உட்கார்ந்து வருபவன், டில்லி ஸ்டேஷனிலோ, அல்லது அதற்கு முந்தின எந்த ஸ்டேஷனிலோ இறங்கப் போகிறவன். அந்நியன். தமிழ் பேசுபவனாகத் தெரியவில்லை. வட இந்தியன், பிரயாணம் முழுவதும் அவனுடன் பேசாமலே கூடப் போக



வாம். தென் இந்தியர்கள் மீது முக்கியமாகத் தமிழர்கள் மீது எல்லா வட இந்தியர்களுக்கும் இருக்கிற அலட்சியம் இவனுக்கும் இருக்கலாம். இருக்கலாம் என்ன ... அப்படித்தான் இருக்க வேண்டும். முகத்திலேயே அந்த இறுக்கமும், அலட்சியபாவனையும் தெரிகிறது. இவன் யாராக, எப்படிப்பட்டவனாக இருந்தால் தனக்கென்ன... மீண்டும், மீண்டும் அவனைப் பற்றி எதற்காக நினைக்க வேண்டும்?

'எதிரில் உட்கார்ந்திருக்கிற இளைஞனே... நீ யாராக வேண்டுமானால் இருந்து விட்டுப் போயேன்...'

கிருத்திகா தன் பார்வையையும் நினைப்பையும் இழுத்து ஜன்னலுக்கு வெளியில் திருப்பினாள். பின்னுக்கு ஓடிய மரங்களும், தந்திக் கம்பங்களும், வயலில் வேலை செய்த மனிதர்களும் அவளையும் இழுத்துக் கொண்டு போய்ச் சென்னையில், அம்மாவிடம் நிறுத்தின. அம்மா ஞாபகம் வந்ததும் மனம் கசியத் தொடங்கியது. இத்தனை நேரம் வீட்டிற்குப் போயிருப்பாள்.

''என்ன புவனா ரயில் கிளம்பிடுத்தா... ஏற்றிட்டு வந்துட்டியா... ''என்கிற நாகம்மாளின் சம்பிரதாயக் கேள்விக்கு வெறுமனே தலையாட்டுவாள்.

பின் என்ன செய்வாள்... இனி அந்த வீட்டில் எப்படித் தனியாக இருக்கப் போகிறாள்... எத்தனை தரம் மாடிக்கும், கீழிற்கும் ஏறி இறங்குவாள்... சின்ன வீட்டை எவ்வளவு முறைதான் சுற்றிவர முடியும்... அம்மாவிற்குப் படிக்கிற பழக்கம் இல்லை. மற்ற சராசரி அம்மாக்களைப் போலவே இவளும் தமிழ்ப் பத்திரிகைகளை மேய்கிறவள். சினிமா கிசுகிசுக்கள் படிக்கிறவள். ஏதாவது தொடர்கதைகள் படிப்பாளோ என்னவோ... கிருத்திகாவுக்குத் தெரியாது. கிருத்திகா படிக்கிற புத்தகங்களிலும், பத்திரிகைகளிலும் அம்மாவிற்கு விருப்பம் இருந்ததில்லை. இவள் எழுதுகிற புதுக் கவிதைகள் அம்மாவிற்குப் புரிந்ததில்லை. எப்போதாவது எதையாவது எழுதி விட்டு உற்சாகம் தாங்காமல் மாடியிலிருந்து குதித்துக் கொண்டு வந்து அம்மாவிடம் படித்துக் காட்டுகிற போது அவள் வெறுமனே தலையாட்டுவாள். அல்லது இவளின் சந்தோஷத்தைக் கலைக்க மனசு வராமல், ''ரொம்ப நன்னாயிருக்கு கீர்த்தி. குமுதத்திற்கோ, கல்கிக்கோ, ஆனந்த விகடனுக்கோ அனுப்பேன். பிரசுரிப்பார்கள்'' என்பாள்.

''போம்மா. இதையெல்லாம் அவர்கள் யாரும் பிரசுரிக்க மாட்டார்கள். இது ராபர்ட் ஃப்ராஸ்டின் ஒரு கருத்தை அடிப்படையாக வச்சு எழுதினது...'' என்று மறுப்பாள் இவள்.

அப்படித்தான் ஒருநாள் மு. மேத்தாவின் 'கண்ணீர்ப் பூக்கள்' புத்தகத்திலிருந்து ஒரு கவிதையைப் படித்து விட்டு நெஞ்சு தாங்காமல் ஓடி வந்தாள். ஏதோ நிகழ்ச்சிக்கு ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்த அம்மாவைக் கலைத்து அதைக் கேட்கச் சொன்னாள்.

''அம்மா கொஞ்சம் உன் பாட்டை நிறுத்திட்டு இதைக் கேளேன்...''

புவனேஸ்வரிக்கு லேசாய் எரிச்சல் வந்தது 'பாடுகிற நேரத்தில் தொந்தரவு பண்ணக் கூடாதென்று தெரியாதோ இந்தப் பெண்ணிற்கு... சின்னக் குழந்தை மாதிரி இப்படித் திபுதிபுவென்று ஓடிவந்து கலைக்கிறதே... கவிதை எழுதுகிற போது லேசாய் ஒரு குரல் கொடுத்து விட்டால் என்னமாய்க் கோபம் வருகிறது. 'எழுதற போது நடுவில் சின்ன சத்தம் கேட்டால் கூட எழுத்து கலைஞ்சு போறதும்மா. அப்படி என்ன தலை போகிற விஷயம்? கொஞ்சம் இருந்து அப்புறம் தான் கேளேன்...'



என்று சிடுசிடுக்கிறவனுக்குப் பாடுகிற போது குறுக்கிட்டால் என் பாட்டும் கலைந்து போகும் என்பது தெரியாதோ...'

ஆனால் புவனேஸ்வரி ஒரு நாள் கூட அப்படிக் கேட்டதில்லை. மாறாக, ''என்ன அவ்வளவு முக்கியமான விஷயம் அந்தப் புஸ்தகத்திலே இருக்கு. சொல்லு...''

''படிக்கிறேன் கேட்கறியா...''

''ம்...''

''விழிகள் —
நட்சத்திரங்களை வருடினாலும்
விரல்களென்னவோ
ஜன்னல் கம்பிகளோடுதான்...''

''எப்படியிருக்கு பார்த்தியாம்மா... நாலே வரிகளில் மனிதனின் எண்ண உயர்வுகளையும், ஆனால் அவன் தளையிடப்படுகிற விதத்தையும் எத்தனை அழகாகச் சொல்லியிருக்கார் பார்த்தியா? எனக்கென்னவோ இதை அவர் இந்தத் தேசத்துப் பெண்களையும் அவர்களின் நிலைமையையும் நினைத்தே எழுதியிருப்பதாகப் படுகிறது. உனக்கு என்னம்மா தோணறது...?''

''நாலு வரிக் கவிதையில் நீ என்னென்னவோ சொல்றே கீர்த்தி. எனக்குப்புரிஞ்சதெல்லாம் விழிகள், நட்சத்திரங்கள், விரல்கள், ஜன்னல் கம்பிகள் இவைதான். இதில் இந்த தேசமும், பெண்களும் மனிதனுடைய எண்ண உயர்வுகளும் எங்கிருந்து வந்தன...?''

குபுக்கென்று அத்தனை உற்சாகமும் அடங்கிப் போகும் கீர்த்திகாவிற்கு. ஜடம், ஜடம் என்று மனசுக்குள் அம்மாவைத் திட்டிக் கொள்வாள். இவள் எப்படி இத்தனை பாட்டுக்களை இவ்வளவு பாவத்துடன் பாடுகிறாள் என்று தோன்றும். தன் சந்தேகத்தை உள்ளடக்காமல் கேட்டும் விடுவாள்.

''ஏம்மா, நீ பாடற பாட்டுக்கெல்லாம் அர்த்தம் புரிஞ்சுதான் பாடறியா...''

''ஏண்டி, என் பாட்டுக்கும் இந்தக் கவிதைக்கும் இப்போ என்ன சம்பந்தம் வந்தது?...''

''இல்லே, அர்த்தம் புரியல்லேன்னு பாவம் வர முடியாதேன்னு கேட்டேன்...''

---

நீதிபதி: ''நீ ஏதாவது கூற விரும்புகிறாயா?''

திருடன்: ''நான் அடிக்கடி அபராதம் செலுத்தறவன். ஏதோ கட்டுப்படி ஆகிறமாதிரி போடுங்க.''

—லை. அ. கதிர்வேல்.



''என்னுடையதெல்லாம் முக்கால்வாசி தெலுங்குப் பாட்டுக்கள். எனக்குத்தெலுங்கு நன்றாகத்தெரிஞ்ச காரணத்தினாலே என்னாலே அர்த்தத்தையும் புரிஞ்சுக்க முடியறது... மேலும் அந்தப் பாட்டெல்லாம் எளிமையா பக்தி பாவத்தில் அமைஞ்சிருக்கு. உட்பொருளைத் தேடிண்டிருக்க வேண்டாம்.''

''ஏம்மா, நீ எங்கே பிறந்தே...''

''கும்பகோணத்துல....''

''எங்க படிச்சே...?''

''அங்கேயேதான்...''

''எந்த பாஷையில் படிச்சே...?''

''தமிழ்...''

''வீட்ல பேசினது...?''

''சௌராஷ்டிரம்...''

''சரி. இங்கே அப்பாகிட்ட வந்தப்புறம்?''

''தமிழ்...''

''அப்பா அசல் தமிழர்தானே....? அதுவும் தஞ்சாவூர் மண்ணில் பிறந்து தமிழ் வாத்தியாராக இருந்தவர்தானே...?''

''ஆ—மாம்....''

''உனக்குத் தமிழ் பேச, புரிஞ்சுக்க வரும். படிச்சதும் தமிழ் மீடியம். ஆனால் தமிழ் வராது. தமிழ்க் கவிதை புரியாது. தெலுங்கு நன்றாக வரும்னு சொல்றியே.... அது எப்படிம்மா...?''

''அது எப்படின்னா, எங்கப்பா தெலுங்கு. நான் பண்ணிண்ட மாதிரியே எங்கம்மாவும் ஜாதி விட்டு, பாஷைவிட்டு, அப்பா, அம்மா, சொந்த மனுஷா அத்தனை பேரையும் பகைச்சுண்டு கல்யாணம் பண்ணிண்டா. சின்ன வயசிலேருந்து அப்பாகிட்ட தெலுங்குதான் பேசுவேன். அதுவுமில்லாமல் சௌதாமினி தெலுங்கு பேசறவள். அவளோடத்தானே முக்கால்வாசி நேரம் இருக்கேன்...''

''போம்மா... என் கூடவும் தான் இருக்கே... ஆனாலும் உனக்குத் தெலுங்கின் மீது இருக்கிற அபிமானமும், பற்றும் தமிழ் மீது இருக்கிறதில்லை....''

இந்த ஞாபகம் வந்தவுடன் சடாரென்று அவளுக்கு அம்மா கொடுத்த விலாச அட்டையும், விஷ்ணு பிரசாத் என்ற பெயரும் கூடவே நினைவிற்கு வந்தன. விஷ்ணுபிரசாத் என்ற பெயரிலிருந்து அவர் தெலுங்கு பேசுகிறவராகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்றிற்று. அம்மாவிற்கு மிகவும் தெரிந்த அல்லது நெருங்கினவராக இருக்க வேண்டும். அதனால் தான் டில்லி போன உடனே அவரைப் பார்க்கச் சொல்லி அழுத்தி, அழுத்திக் குறிப்பிட்டாள். என்ன உதவி வேண்டுமானாலும் தாராளமாகக் கேட்கலாம், மறுக்காமல் செய்வார் என்றாள்...'

அம்மா சொன்ன தாராளம் லேசாய் உறுத்தத் தொடங்கிற்று. 'யார் இந்த விஷ்ணு பிரசாத் என்பதை ஏன் கேட்டுத் தெரிந்து கொள்ளாமற் போனேன்' என்று தோன்றிற்று. ஆனால் கேட்டாலும் அம்மா சொல்லியிருப்பாளோ என்றசந்தேகம்வந்தது.

தன்னை ஏன் டில்லிக்கு அனுப்பிப் படிக்க வைக்கிறாள் என்பதையே அம்மா சொல்லவில்லை. சமயம் வருகிற போது உனக்கே புரியும் என்று சொல்லி விட்டாள். அப்படி என்ன புதிர் இருக்கிறது அதில்...?'




# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

# குணா

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம்.
பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும்.
தினசரி தலைக்குத் தேய்த்து வந்தால் தலை மயிர்
நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு
மண்டையில் சொறிந்தால் செதில் உதிர்தல்
குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும்
விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 001**

---

*எமது தைலம் கிடைக்குமிடங்கள்:* 1. சேலம் – ரோசு மெடிக்கல்ஸ். 2. ஆத்தூர் – முத்து மெடிக்கல்ஸ், 3. நாமக்கல் – கஸ்தூரிபா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம் – ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ், 5. மேட்டூர் – ஜெயலக்ஷ்மி மெடிக்கல்ஸ், 6. திருச்செங்கோடு – சீனிவாசா மெடிக்கல்ஸ், 7. தர்மபுரி – விஜயலக்ஷ்மி மெடிக்கல்ஸ் 8. கிருஷ்ணகிரி – கோபாலகிருஷ்ணா மெடிக்கல்ஸ் 9. ஒசூர் – மூர்த்தி மெடிக்கல்ஸ் 10. பெங்களூர் – பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள். 11. சென்னை-3 – ஹேமா மெடிக்கல்ஸ். 12. அமிஞ்சிகரை – வேலவன் மெடிக்கல்ஸ் 13. குடியாத்தம் – திருமகள் மெடிக்கல்ஸ். 14. காஞ்சிபுரம் – லக்ஷ்மி மெடிக்கல்ஸ். 15. அரக்கோணம் – அகிலாம்பிகை மெடிக்கல்ஸ். 16. ஆரணி – பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை. 17. திருவண்ணாமலை – அன்னை மெடிக்கல்ஸ். 18. வேலூர் (NA) – பாரத் மெடிக்கல்ஸ். 19. திருப்பத்தூர் (NA) – லக்ஷ்மி மெடிக்கல்ஸ் 20. விழுப்புரம் – அன்பு மெடிக்கல்ஸ் 21 கள்ளக்குறிச்சி – A. ராஜி நாட்டு மருந்துக்கடை. 22. கும்பகோணம் – செல்வம் மெடிக்கல்ஸ். 23. தஞ்சாவூர் – சிட்டி மெடிக்கல்ஸ். 24. திருச்சி – சண்முகா மெடிக்கல் ஹால் 25. திண்டுக்கல் தமிழ்நாடு சித்த மருந்துக்கடை 26. பெரியகுளம் – N. லக்ஷ்மணன் மருந்துக்கடை. 27. தேனி – ஆண்டாள் மெடிக்கல்ஸ் – 28. மதுரை – குமார் மெடிக்கல்ஸ். 29. மதுரை – ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை). 30. ராமநாதபுரம் – பாத்மா மெடிக்கல்ஸ். 31. காரைக்குடி – மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ். 32. விருதுநகர் – S.S.K. மெடிக்கல்ஸ். 33 தூத்துக்குடி – அன்பு மெடிக்கல்ஸ். 34. திருநெல்வேலி – கோமதி மெடிக்கல்ஸ். 35. பாளையங்கோட்டை – ஒலியா இந்தியன் மெடிக்கல்ஸ் 36. நாகர்கோவில் – S. நல்ல பெருமாள் மருந்துக்கடை. 37. தென்காசி – M.R. மெடிக்கல்ஸ். 38. ராஜபாளையம் – அரவிந்த் மெடிக்கல்ஸ். 39. சிவகாசி – சிவகாசி மெடிக்கல்ஸ். 40. கோவில்பட்டி – சாந்தி மெடிக்கல்ஸ் – 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் – பாலாஜி மெடிக்கல்ஸ் - 42. உடுமலை – ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ் 43. பொள்ளாச்சி – ராமநாதன் மெடிக்கல்ஸ் 44. கோவை – காசிநாத் அண்ட் கோ., 45. கோவை – திருமலை மெடிக்கல்ஸ் காந்திபுரம் 46. திருப்பூர் – கீதா மெடிக்கல்ஸ். 47. அவினாசி – அவினாசி மெடிக்கல்ஸ் 48. கோபி – வாணி பார்மஸி 49. ஈரோடு – ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிக்கல்ஸ் 50. திருச்சி ஜங் – கபாஸ்ரீ மெடிக்கல்ஸ் 51. புதுக்கோட்டை – மீனு பார்மஸி 52. திருவாரூர் – அன்னபூர்ணா மெடிக்கல்ஸ் 53. மாயவரம் – ஸ்வாமி மெடிக்கல்ஸ். 54. சிதம்பரம் – ராஜா பார்மஸி 55. விருத்தாசலம் – ஜெயா பார்மஸி 56. சேலம் செவ்வாய்பேட்டை – பிரபாத் மெடிக்கல்ஸ் 57. தொட்டியம் – மீனாக்ஷி மெடிக்கல்ஸ் 58. கிருஷ்ணகிரி - பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ் 59. கரூர் - அண்ணாமலை மெடிக்கல்ஸ்

---

எமது இதர சித்த ஆயுர்வேத தயாரிப்புகளான நவரத்ன கல்பலேகியம், சில்வர் பில்ஸ், வாயுக்சூர், குணா மலசுத்தி சூரணம், நெல்லிக்காய் லேகியம் etc. எமது ஸ்டாக்கிஸ்ட்டுகளிடம் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

நிறைய சந்தர்ப்பங்களில் அம்மா ஒரு புதிராகத்தான் இருக்கிறாள். அவளால் தீர்க்க முடியாத புதிர். இவனும் ஆழமாகத் தலையிட்டுத் தீர்க்க நினைத்ததில்லை. பொதுவான விஷயங்களைத் தவிர அதிகம் சொந்த பிரச்சினைகளில் தலையிட்டதில்லை. துருவித் துருவிக் கேள்விகளைக் கேட்டதில்லை. காரணம் — அம்மா எது செய்தாலும் சரியானதாகத்தான் இருக்கும் என்கிற நம்பிக்கை. அந்த முகமும், நெஞ்சும் தப்பு செய்யாது என்கிற தீர்மானம். எங்கே போனாலும், யாரோடு பேசினாலும், எத்தனை பேரோடு பழகினாலும் தன்னை நெருப்பாக நிறுத்தி வைத்துக் கொள்வாள் என்கிற அசைக்க முடியாத திடம். அந்தத் திடமும், தீர்மானமும், நம்பிக்கையும் ஒரு போதும் குழன்றதில்லை. இனியும் குழலாது...

சட்டென்று அம்மாவைப் பார்க்கவேண்டுமென்று தோன்ற ஓடுகிற ரயிலிலிருந்து குதித்து விட்டால் என்ன என்ற எண்ணம் வந்தது. இல்லையென்றால் சங்கிலியைப் பிடித்திழுத்து ரயிலை நிறுத்தலாமா... அல்லது அடுத்த ஸ்டேஷனில் இறங்கி மீண்டும் எதிர் ரயிலைப் பிடித்துச் சென்னைக்குப் போய் —

அப்போதைய வேகத்தில் அந்த மூன்றில் ஏதையாவது ஒன்றை நிச்சயம் செய்துவிடுவோம் என்கிற பயம் வர — தன் நினைவை மாற்றிக் கொள்வதற்காக மிக அவசரமாக ஜன்னலை விட்டுப் பார்வையைப் பெட்டிக்குள் திருப்பினான். அந்த முதல் வகுப்புப் பெட்டியில் அவனையும், எதிர் இளைஞனையும் தவிர இன்னொரு வயதான அம்மாள் அவன் பக்கத்தில் சரிந்து உட்கார்ந்து அந்தக் காலை நேரத்திலேயே கழுத்து ஒரு பக்கம் சாய அரைத் தூக்கமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். வெள்ளைப் புடவை. மார்வாடி பாணியில் தலைக்கு முக்காடிட்டிருந்தாள். அவளோடு நிச்சயம் தன்னால் பேச முடியாது என்று தோன்ற —கிட்டத்தட்ட இரண்டு நாள் பிரயாணத்தில் பேசாமலேயே வரவும் இயலாது என்பதால் கடைசியில் வேறுவழி இன்றி எதிரில் உட்கார்ந்திருந்த இளைஞனிடம் பேச்சுக் கொடுக்க முடிவு செய்து, மெலிதாய் ''எக்ஸ்க்யூஸ் மீ...'' என்றதும்,

அவன் தான் படித்துக் கொண்டிருந்த ஆங்கில நாவலைத் தழைத்து ''எஸ்...'' என்றபடி புன்னகையோடு அவளைப் பார்த்தான். அந்தப் புன்னகை 'நீயாக எப்படியும் என்னிடம் பேசுவாய் என்பது எனக்குத் தெரியும்...' என்று சொல்கிற நமுட்டுச் சிரிப்பாகப் படவே இவளுக்குள் எரிச்சல் தலைதூக்கிற்று. தான் நினைத்தமாதிரி அதே அலட்சியம். வட இந்தியனுக்குள்ள அலட்சியம். எதற்காக இப்போது இவனை நாம் கூப்பிட்டோம்...? வேறு வழியில்லை. கூப்பிட்டாயிற்று. ஏதையாவது கேட்டுத்தான் ஆக வேண்டும்.

''அடுத்து எந்த ஸ்டேஷனில் ரயில் நிற்கும் தெரியுமா...?''

அவனின் அழகான ஆங்கில உச்சரிப்பை ரசித்தபடி தன் புன்னகை மாறாமல் பதில் கேள்வியாகக் கேட்டான் அவன்.

''ஏன், எதற்காகவாவது கீழே இறங்கப் போகிறீர்களா...?''

அந்தக் கேள்வியில் இன்னமும் எரிச்சல் அடைந்த ஜருத்திகா, தன் எரிச்சல் வெளிப்படையாகத் தெரிய— அவன் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே சற்று அழுத்தமாகப் பேசினாள்.

''எதற்காக என்பதைத் தெரியப்படுத்தினால்தான் ஸ்டேஷன் பெயரைச் சொல்வீர்களோ...?''

சடாரென்று அவனின் சிரிப்பு மறைந்தது. முகம் மாறிப் போயிற்று. அப்படிப்பட்ட ஆக்ரோஷமான பதிலை எதிர்பார்க்காத அதிர்ச்சி தெரிந்தது. கால் விநாடி அவள் முகத்தையே அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பின் குரல் தழைய மிருதுவாகப் பேசத் தொடங்கினான்.

''ஐயாம் ஸாரி. எதற்காக என்கிற காரணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று நான் அப்படிக் கேட்கவில்லை. ஒருவேளை ஏதாவது தேவையாக இருந்து வாங்குவதற்காகக் கீழே இறங்குகிற பட்சத்தில் நான் போய் வாங்கித் தந்து உதவி செய்யலாமே என்றுதான் கேட்டேன். என் நோக்கத்தை நீங்கள் தவறாகப்புரிந்து கொண்டு விட்டீர்கள் என்று நினைக்கிறேன். என் கேள்வி உங்களைப் புண்படுத்தியிருந்தால் மீண்டும் மன்னிப்புக் கேட்டுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை...''

இப்போது நிஜமாகவே அதிர்ந்துபோனாள் அவள். ஓரளவு ஏமாந்து போயிருந்தாள் என்று கூடச் சொல்லலாம்.

இப்படிப்பட்ட பண்பையும், மென்மையான பேச்சையும் எதிர்பார்க்கவில்லை. எல்லா மனிதர்களுமே ஒன்றில்லை. எல்லா வட இந்தியர்களும் தென் இந்தியர்களையோ தமிழர்களையோ அலட்சியப்படுத்துவதில்லை என்பதைப் புரிந்து கொண்டவளாகத் தன் குறுகிய மனப்பான்மைக்கும், பேசின எரிச்சலான பேச்சிற்கும் வெட்கப்பட்டவளாக நிதானமாக நிமிர்ந்து ஒரு சங்கடத்துடனே அவனைப் பார்த்தாள் ஜருத்திகா...

(தொடரும்)



அடுத்த வாரம்

அன்புள்ள ரஜினிகாந்த்

ஜெயமன்மதன் தொடர் விமர்சனம்!

# ராஜேஷின் இன்டலக்சுவல் இமேஜ்!



✕ சுரேந்தர்

**ஊர்வசி:**

ஒரு எச்சரிக்கை! பி. சுசீலா, எஸ். ஜானகி வரிசையில் இப்போது ஊர்வசியும் சேரப் போகிறார். 'வாய்ப் பந்தல்' படப்பிடிப்பில் சந்தித்த போது அவரே கொடுத்த வாக்குமூலம் இது: ''எனக்கு இனிமையான குரல்; பாடுவதில் தான் கொள்ளைப் பிரியம். எந்த இசை அமைப்பாளராவது வாய்ப்புக் கொடுத்தால், படங்களில் பாடலாம் என்றிருக்கிறேன்.''

முந்தானை முடிச்சில் வரும் சின்னஞ்சிறு கிளியே பாடலை அப்படியே பாடிக் காண்பித்தார். குரல் அப்படி ஒன்றும் மோசமில்லைதான். இவரது முதல் படமான 'அனுக்கிரக'த்தில் சொந்தக் குரலில் தான் பேசி, நடித்தாராம். படம் இன்னும் வெளிவரவில்லை.

செட்டில் நடிப்பதை விட அவுட்டோர் சுலைத்தான் அதிகம் விரும்புகிறார். ''வெளிப்புறப் படப்பிடிப்புகளில் ஏராளமான ரசிகர்கள் கூடி, என்னை அடையாளம் கண்டு கொண்டு, 'ஊர... வ...ர்வசிடா...' என்று சத்தம் போடும் போது ஏற்படுகிற ஆனந்தமே அலாதியானது!'' என்றார்.

✕ பிருந்தா



**ராஜேஷ்:**

ராஜேஷின் கொள்கைகளை க. மு., க. பி. என்று இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

கல்யாணத்திற்கு முன்பு வரை பொருள் முதல் வாதம் பேசிக் கொண்டிருந்தவர், கல்யாணத்திற்குப் பிறகு கருத்து முதல் வாதத்திற்குக் கட்சி மாறி இருக்கிறார்.

தமது சமீபத்திய படங்கள் 'அச்சமில்லை, அச்சமில்லை', 'ஆலயதீபம்' ஆகியவைகளின் வெற்றியால் கொஞ்சம் பூரித்திருந்தார். தமக்கு மீண்டும் மார்க்கெட் சூடு பிடித்திருப்பதற்குக் காரணம் தம் மனைவி வந்த ராசி தான் என்பதில் ராஜேஷிற்கு அழுத்தமான நம்பிக்கை.

படங்கள் இல்லாமல் வீட்டில் சும்மா இருந்த நாட்களில், பல கருத்தரங்குகளில் பேசினாராம். இதுதவிர ஒரு வாரப் பத்திரிகையில் கமலஹாசனும் இவரும் நடத்திய கலந்துரையாடல் ஒன்று வெளிவந்ததாம். இதெல்லாம் சேர்ந்து தமக்கு ஒரு இன்டலக்சுவல் இமேஜை ஏற்படுத்தி இருப்பதாகச் சொன்னார். (அப்படியா?)

''பத்திரிகைகளுக்குப் பேட்டி கொடுக்கும் போது கூட இன்டலக்சுவலாகப் பேச வேண்டும் என்று நினைக்கிறேன்; இன்டலக்சுவல் கேள்விகளையே எதிர்பார்க்கிறேன்'' என்றார். பாவம், ராஜேஷை நினைத்தால் பரிதாபமாக இல்லை?

ராஜேஷ் இறுதியாய்ச் சொன்னது:



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1984

**பின்வரும் சிறுகதைகள் பிரசுரத்துக்கு ஏற்கப்பட்டுள்ளன:**

1. விழிப்பில் ஒரு தூக்கம் — ''வினோதானந்த''
2. கற்பனை சாம்ராஜ்யத்தில் ஒரு சக்கரவர்த்தினி — —என். கனகவல்லிசாரங்கபாணி
3. ஒரு சத்தியப் பிரவேசம் — ''ஜெரா''
4. மனம் நிறைந்தது— ''ஷைலஜா''
5. சிறையில் ஒரு பறவை — மேட்டூர் நல்லப்பன் (அறிமுக எழுத்தாளர்)
6. முள்ளாக மாறும் இமைகள்— பட்டுக்கோட்டை ராஜா
7. இன்றிரவு பன்னிரண்டு மணிக்குள்... — சுபமுகா
8. அன்புள்ள கெளரி — —வினோதானந்த
9. கொம்பில்லாத மாடுகள்— தேவிபாலா
10. ஏன் முடியாது?—கல்தோசன்
11. கலை — கே. ஆர். முரளி (அறிமுக எழுத்தாளர்)
12. ஜோதியில் வித்தியாசம் இல்லை — வேதாகோபாலன்
13. ஒரு பாவம் கரைகிறது— நா. நாகராஜன்
14. சில நியதிகள் மாறுகின்றன— —கோமகன்
15. அவன் வரக் கூடாது — விஜயா கண்ணன்

''மார்க்ஸியத்தில் உறுதியான பிடிப் புள்ளவளும் இருந்தேன். ஆனால் சமீபத்தில் பகவத்கீதையைப் படித்தேன். மார்க்ஸியத்தை விட கீதை என்னைப் பெரிதும் பாதித்து விட்டது!''

**பிருந்தா:**

பி. ஜ. டி. நகரில் ஒரு மாடி போர்ஷனில் குடி இருக்கிறார், பிருந்தா. 'வணக்கம்' தெரிவித்துவிட்டு, இருக்கையில் வந்தமர்ந்த விதம், வெகு நளினம்.

'பிரியமுடன் பிரபு'வை அடுத்து, 'இது எங்க பூமி'யில் நடித்திருக்கிறார். சென்சார் பிரச்னையில் படம் இன்னும் வெளிவராமல் இருக்கிறது.

இப்போது கே. என். ஜி. யின் 'படிக்காத பண்ணையார்' படத்தில் சிவாஜியின் மகளாக நடிக்கிறாராம். சந்திரசேகரும், இவரும் இணைந்து நடித்த 'உயிரே உயிரே' முடிகிற நிலையில் இருப்பதாகச் சொன்னார்.

வார்த்தைகளை மில்லிமீட்டர் கணக்கில் அளந்து பேசுகிறார். சுபாவமா? வளரும் நடிகைக்குள்ள அச்சமா?

**சுரேந்தர்:**

பின்னணிப் பாடகர் சுரேந்தர் இப்போது – தயாரிப்பாளர் சுரேந்தர்! எஸ்.ஏ. சந்திரசேகரன் டைரக்ஷனில் உருவாகும் 'குடும்பம்' இவருடையதுதான்.

இந்தப் படத்திற்காக எல். ஜானகியோடு ஒரு பாடலைப் பாடிவிட்டு ரிகார்டிங் தியேட்டரை விட்டு வெளியே வந்த சுரேந்தரைச் சூட்டோடு சூடாகப் பிடித்தேன்.

சட்டம் ஒரு இருட்டறையில் இவர் பாடிய 'தனிமையிலே ஒரு ராகம்' பாடலும் அதைத் தொடர்ந்து இவரது எல்லாப் பாடல்களுமே வெற்றி பெற்றிருக்கிறதாம்.

''ஆனாலும் இந்த இசை அமைப்பாளர்கள் ஏனோ எனக்கு இன்னும் வாய்ப்பளிக்காமலே இருக்கிறார்கள். ஏதோ, அவ்வப்போது படங்களுக்கு டப்பிங் கொடுத்து வந்தேன். இனி, அதுக்கும் ஆபத்து வந்திடும் போலிருக்கு. 'சுரேந்தர் தயாரிப்பாளர் ஆகிவிட்டார். அவர் இனி டப்பிங்கொடுக்க மாட்டார்' என்று சொல்லியே என்னைப் புறக்கணிக்கப் பார்ப்பார்கள்'' என்றார்.

**க. உ. ச.**

'ராஜா யுவ ராஜா' படப்பிடிப்பில் டைரக்டர் சோமசுந்தரத்தை (முன்னாள் பி. ஆர். சோமு) சந்தித்தேன். ''ஒரு படத்துக்கு க. உ. ச. வேணுமுங்க. அது இருந்தா தான் படம் ஓடும்'' என்று யாரிடமோ பேசிக் கொண்டிருந்தார். கிட்டே நெருங்கி ''அதென்னங்க க. உ. ச.?'' என்றேன்.

''அதுதாங்க கதை – உதை – சதை! கதை பத்து சதவிகிதமும் இருக்கலாம். அதுக்கும் குறைவாகவும் இருக்கலாம். ஆனா கண்டிப்பா 75 சதம் உதையும் சதையும் வேணும்'' என்றார்.

கடவுளே!...

—சம்பத்தி

விலாசச் சீட்டை இன்னொரு முறை எடுத்துப் பார்த்துக் கொண்டான்.

ஏழெட்டுத் தடவை பார்த்து விட்டதால் மடங்கிய ஓரங்கள் நைந்து போயிருந்தன. வியர்வையினால் சீட்டு நமுநமுப்பாக இருந்தது.

'எம். கனகப்பன், 282, முத்துகாளத்தி தெரு, சைதாப்பேட்டை' என்றிருந்தது விலாசம்... விலாசத்தின் கீழாக வீட்டின் அடையாளத்தை வரைபடம் போட்டுக் காட்டியிருந்தான் கனகப்பன்.

இன்னும் இரண்டு சந்துகளைத் தாண்ட வேண்டும், கனகப்பன் குறிப்பிட்ட பால் பூத்தை அடைய என்பதைச் சடகோபன் புரிந்து கொண்டான்.

இந்த அளவுக்கு விலாசத்தையும், அடையாளத்தையும் அவன் கொடுத்திருப்பதால் நிச்சயம் பணம் கொடுப்பான் என்று மனத்தைத் தெம்புபடுத்திக் கொண்டான்.

பால் பூத்துக்குச் சற்று முன்பாக ஒரு சின்ன டீக்கடை.. டீ சாப்பிடலாமா என்று யோசித்தவனாக பர்ஸைத் துழாவினான். பர்ஸில் ஒரு ரூபாய் இருபது காசுகளே இருந்தன... போன வாரம் வரை எல்லா இடங்களிலும் டீ முப்பது பைசாதான்... திடீரென்று முப்பத்து ஐந்து பைசாவாக உயர்த்தி விட்டனர்... டீக்குப் போக எண்பத்து ஐந்து பைசா... திரும்பிப் போக பஸ் சார்ஜ் அறுபது பைசாதான். எப்படியும் கனகப்பன் பணம் கொடுப்பானே!

ஒரு ஸ்ட்ராங் டீ குடித்தான்...

ஆனாலும் வயிற்றில் ஏதோ ஒரு பிசையல்...

வழக்கமாக அலுவலக நாட்களில் இந்த ஏழரை மணி காலையில் சாப்பாடே ஆகி, அலுவலகம் கிளம்பி விட்டிருப்பான்... அதனால் தான் இன்று வயிற்றில் ஏதோ ஒரு நெருடல் என்று புரிந்து கொண்டான்..

மீண்டும் நடக்க ஆரம்பித்தான்...



முத்துக் காளத்தி தெரு, போர்ட் ஏதும் இல்லாமல் ஒரு பெரிய குப்பை மேட்டுடனும், துர்நாற்ற சாக்கடைத் தொட்டியுடனும் கனகப்பன் குறிப்பிட்ட சகல லக்ஷணங்களும் பொருந்தியதாய்த் தொடங்கிற்று.

தெருவின் இரு சாரியிலும் வரிசலாக ஓட்டு வீடுகள்... ஒவ்வொரு வீட்டிலும் குறைந்தது நாலைந்து குடித்தனங்களுக்குக் குறைவிருக்காது என்று அவனுக்குத் தோன்றியது... குறைந்த பட்சம் ஐம்பது வயதுக்குக் குறையாத வீடுகளாக இருக்கும்.

சடகோபன் இருக்கும் வீடு ஸ்டோர் மாதிரிதான்... பதினெட்டுக் குடித்தனங்கள். ஒரு வித்தியாசம்... தளம் உண்டு... காற்று என்றால் என்ன என்று கேட்கும் வகைதான்.. ஒரு டேபிள் ஃபான் நாள் மொத்தம் ஓடிக் கொண்டிருக்கும்.

வாடகை எண்பதாக இருந்தது. நாலு வருடங்களில் நூற்று நாற்பதாக உயர்ந்து விட்டது.. இங்கு என்ன வாடகை என்று விசாரித்தாக வேண்டும்...

வீட்டு இலக்கங்களை எண்ணி வந்தவன் 282 எண்ணைக் காணாமல் சற்றுத் தடுமாறி ஒழிந்த அரை நிஜாருடன் கோலி விளையாடும் நாலு சிறுவர்களிடம் விசாரித்து, கனகப்பன் பெயரைச் சொன்னதும் வழி காட்ட வீட்டைக் கண்டுபிடித்தான்...

ஆறு குடித்தன வீடு...

தயங்கி நடந்து கனகப்பன் போர்ஷனைக் கேட்டு அறிந்து கொண்டு குரல் கொடுத்தான்...

''யாரு வேணும்...'' ஒரு பெண் வந்து விசாரித்தாள்... இருபது வயதுக்கு மேலிருக்காது... மாநிறம்... களையாக இருந்தாள்... கழுத்தில், கைகளில் காத்திரமான நகைகள்.

''கனகப்பன்னு...''

''வாங்க... உட்காருங்க... தலை முழுகிக்கிட்டு இருக்காரு. தோ வந்துடுவாரு...'' உள்ளே அழைத்து நாற்காலி போட்டாள்... தன்னிடம் நாற்காலி இல்லாதது சடகோபனுக்கு நினைவில் வந்தது..

''ஏங்க... தேடிக்கினு வந்திருக்காங்க..'' என்று உள்ளே போய்க் குரல் கொடுத்தாள்...

''சடகோபன் சாரா இருக்கும்... உட்கார வை... இதோ வந்துடறேன்...'' கனகப்பன் குரல் கேட்டது...

மறுபடியும் வெளிவந்து புன்முறுவல்பூத்து 'சொல்லிட்டேன்... தோ வந்துடுவார்...' என்று உள்ளே போனாள்... கனகப்பனுக்கு ஏற்ற மனைவி...

காத்திருந்த பொழுதில் புழு மனத்தில் நெளிந்தது... இவ்வளவு கௌரவமாக இருப்பவன் தன் கணவனிடம் கடன் வாங்குகிறானே என்று கனகப்பன் மனைவி தன்னை மட்டமாக எடை போட்டு விடுவாளோ என்று மனத்தில் நெருடல்...

குழந்தையின் உடம்புக்குத்தானே கடன் வாங்குகிறோம்.. யார் என்ன நினைத்தால் என்ன என்று ஓர் ஆறுதல்...

கல்யாணமாகி இந்த மூன்று ஆண்டுகளில் இது மாதிரி வெளி மனிதரிடம் அவன்கடன் வாங்கியதே இல்லை... ஆபீஸில் லோன் போடுவான்... அட்வான்ஸ் போடுவான்... மெடிகல் பில் போடுவான்... அப்படியும் வழி இல்லாவிட்டால் தன் அண்ணனிடம் கைமாற்றாக வாங்கிக் கொண்டு ஒரு தவணையிலோ, சில தவணைகளிலோ கொடுத்துவிடுவான்...

அண்ணனிடம் பணம் கேட்கப்போனால் ஒரு சங்கடம் உண்டு... அண்ணிக்குத் தெரியாமல் தான் அண்ணன் கொடுப்பான்..: அதனால் சமயம் பார்த்துக் கேட்க வேண்டும். உபதேசம் செய்து விட்டுத்தான் கொடுப்பான்...

இந்த தடவை அண்ணன் ஊரில்இல்லை... எல். டி. சி. போட்டுக் குடும்பத்தோடு ஊர் போயிருந்தான்...

திடீரென்று ஒரு பணப் பிரச்சினை முளைத்தது... திடீரென்று ரேஷனில் எண்ணெய் 5 கிலோ டின் வந்தது... அதோடு மண்ணெண்ணெய், சர்க்கரை, அரிசி என்று கையிலிருந்த பணத்தைத் இரட்டிப்போட்டு வாங்கினான்... மறுநாள் காலை எதிர்பாராமல் குழந்தைக்கு ஜுரம் கண்டது... பணம் இல்லாமல் அபராதம் போடுவதாக வேண்டிக் கொண்டு பெருமாள் உண்டியிலிருந்த பணத்தை எடுத்துக் கொண்டு குழந்தையுடன் வழக்கமான குழந்தை வைத்தியரிடம் போனான்..

குழந்தை வீல், வீலென அலற உடம்பில் எல்லா இடங்களையும் அமுக்கிப் பார்த்தார்.. 'வைரஸ் ஜுரமாக' இருக்குமென முனகிவிட்டு, சளி, மூத்திரம், ரத்தம், மான்டோ,

---

## சுதந்திரத்தால் கிடைத்த பயன் !



பாகிஸ்தான் பிரிவினையையொட்டி வகுப்புக் கலவரங்கள், அகதிகள் பரிவர்த்தனை நடந்து முடிந்த பிறகு ஒருசமயம் நேரு பஞ்சாபிற்கு வந்திருந்தார். ஒரு முரடன் அவர் பாதையில் குறுக்கிட்டான். ''எங்கள் உறவினர் மூலைக்கு ஒருவராகச் சிதறி விட்டனர். வீடுகள் நாசமாகி விட்டன. சுதந்திரத்தினால் என்ன பலன்?'' என்று கேட்டான்.

நேருஜி அவனைத் தட்டிக் கொடுத்து, ''ஒரு நாட்டின் பிரதம மந்திரியைத் தைரியமாக இடைமறித்து நின்று மனத்தில் உள்ளதை வெளிப்படையாகச் சொல்லும் அளவுக்குச் சுதந்திரம் கிடைத்திருக்கிறதே, அதுதான் பலன்!'' என்று பதில் அளித்தார்.

முரடன் மன்னிப்புக் கேட்டான்.

—டாக்டர் நிர்மலா மோகன்,

மலம் எல்லாவற்றையும் டெஸ்ட் பண்ண எழுதிக் கொடுத்து ப்ருஷ்டத்தில் ஊசி போட்டு, சின்னதாக இரண்டு மாத்திரைகள் கொடுத்து, முழுத்தாளுக்குக் குறைவில்லாத பிரிஸ்கிரிப்ஷனில் ரகவாரியாக நாலு மருந்துகள் எழுதிக் கொடுத்து, தனக்கு பட்டுமாகப் பதினைந்து ரூபாய்கள் வாங்கிக் கொண்டார்... 'டெஸ்ட்' ரிசல்ட்களுடன் 'நாளை மறுநாள' வரச்சொன்னார்...

மொத்தம் கணக்கு செய்ததில் எழுபது ரூபாய் ஆகியது... சே! இதென்ன வைத்தியம் என்று வெறுப்பு ஏற்பட்டது... முன்பெல்லாம் பாட்டிலில் டோஸ் அளவு ஒட்டி திரவ மருந்து கொடுப்பார்கள்... மூன்று நான்கு டோஸ்கள் கொடுத்தாலே உடம்பு குணமாகும்... கையிலிருந்த பணத்துக்கு மருந்தை வாங்கிக் கொண்டு, டாக்டர் எழுதிக் கொடுத்த டெஸ்ட்களுக்காகவும், பாக்கி மருந்துச் செலவுக்குமாகக் கனகப்பனிடம் நூறு ரூபாய் கடனாக முன்தினம் கேட்டான். அவன் மூன்று வட்டிக்குக் கொடுக்கிறான் என்று கேள்விப்பட்டுத்தான் கேட்டான்...

''சடகோபன் சார்... நீங்க கேக்காத மனுஷர்... கேட்கறீங்க... இப்பன்னு பார்த்துக் கையிலே ஒரு ரூவா பணம் கூட இல்லே... வீட்லயும் இல்லே... வேணும்னு நாளைக்கு வீட்டுக்கு வாங்க... எங்கேயாவது ஏற்பாடு செஞ்சு வைக்கிறேன்'' என்று கூறி கனகப்பன் விலாசம் எழுதிக் கொடுத்ததை நம்பித்தான் சடகோபன் வந்திருந்தான்... பணத்தை வாங்கிக் கொண்டு போய் மெடிகல் டெஸ்ட் ரிசல்டை வாங்கவேண்டும்.

''வாங்க சார்... மன்னிக்கணுங்க ரொம்ப நேரம் காக்க வெச்சுட்டேன்...''

''பரவாயில்லே...'' சடகோபன் தெளிந்தபடி கூறினான்...

''பங்கஜம்... சாருக்குச் காபி பிஸ்கோத் கொண்டா...''

இட்லி, மிளகாய்ப் பொடி, சாம்பார் சகிதம் கனகப்பன் நாஸ்தா செய்ய, சடகோபன் இரண்டு பிஸ்கட், காப்பி சாப்பிட்டான்...

கனகப்பன் பணத்தைப் பற்றிப் பேசவில்லை. மறந்து விட்டிருப்பானோ?

சாப்பிட்டதும் இருவரும் வெளிக் கிளம்பினர்.

''சார் மன்னிக்கணும்... ரெண்டு மூணு இடத்துலே ட்ரை செஞ்சேன்... கெடைக்கலே... மாசக் கடைசியில்லே... அதான்... இப்ப டெம்ப்ரவரியா யார் கிட்டேயாவது அட்ஜஸ்ட் செஞ்சுக்குங்க... ஒண்ணாந்தேதி தேவைன்னு சொல்லுங்க நூறு என்ன... இருநூறு கூட தர்றேன்...''

பெரிய நம்பிக்கை அடிபட, மனத்தில் ஏதோ இடி விழுந்தது போலிருந்தது... என்ன செய்வது உடனடி பணத்திற்கு...

அதைப்பற்றிப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்... இவனிடம் பணம் தான் கிடைக்கவில்லை... மதிப்பையாவது நிலைநிறுத்திக் கொள்ளலாமே என்று ஒரு பொறி பறந்தது.

''அதனால் பரவாயில்லே கனகப்பன்... நான் இங்கே வந்ததே பணம் வேணும்னு

# சிறு தவறு! பெரும் சிரிப்பு!

போட்டி : 15



அலுவலகத்திலோ, வீட்டிலோ நீங்கள் செய்த காரியத்தில் சிறு தவறு நேர்ந்து சுற்றியிருந்தவர்கள் சிரிக்க நீங்களும் சேர்ந்து சிரித்திருக்கக் கூடும். அந்த நிகழ்ச்சி என்ன? இதோ எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். உறையின் மீது ''சிறு தவறு: பெரும் சிரிப்பு'' என்று குறிப்பிடவும். சுருக்கமாக எழுதப்பட்ட சுவையான சம்பவம் பிரசுரமாகிப் பரிசு பெறும். தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு பட்டுப்புடைவை பரிசு.

முடிவு தேதி: 27.8.84.

38 பட்டுப் புடவைகளுள் ஒன்றைப் பெற வாரம் தவறாமல் போட்டிகளில் கலந்து கொள்ளுங்கள்.

என் பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

பரிசுத் திட்டம்

பட்டுப் புடவை

# தலைவலி பலவகை உண்டு

# சிகிச்சை ஒன்றே ஒன்று!

# அனாஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது—அனாஸின்.

தலைவலி, ஜலதோஷம், ஃப்ளு, முதுகு வலி, தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது.

அனாஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.



சக்தி வாய்ந்த நம்பகமான
மேனர்ஸ்
அனாஸின்*

இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

* Licensed user of T.M. : Geoffrey Manners & Co.Ltd.

GM-2-83 TM

வரலை... ஏதோ அந்தவேளை தேவைப்பட்டதா... நேற்று உன்னிடம் கேட்டேன்... வீட்டுக்குப் போனால் எனக்கு வரவேண்டிய பணமே வந்து விட்டிருந்தது... வேணும்னு சொல்லத்தான் வந்தேன்... தொந்தரவு கொடுத்திருந்தா மன்னிச்சுக்க.''

''என்ன சார் பெரிய வார்த்தையெல்லாம் பேசறீங்க... இதுக்குன்னு இம்மாம் தூரம் சிரமப்பட்டு நீங்க வந்திருக்கணுமா? பரவாயில்லே... இந்தச்சந்தர்ப்பத்துலே நம்ப வீட்டுக்கு வந்தீங்களே... வாங்க பஸ் ஸ்டாண்ட் வரை கூட வர்றேன்...''

இருவரும் ஏதோ பேசியபடி நடந்தனர். மனத்தில் மட்டும் பாரம்... அதேசமயம் கனகப்பனிடம் கௌரவம் காப்பாற்றப் பட்டதில் திருப்தி...

பத்தடி நடந்திருப்பார்கள்...

''என்ன கனகு... எங்கெல்லாம் உன்னைத் தேடறது... வீட்டாண்டை போனேன்... இப்பத்தான் போனேன்னு சொன்னாங்க...'' கனகப்பனின் ஒரு சகா...

''என்ன விஷயம் கதிரேசா?''

''நேத்தி கேட்டியே... காலேலே மச்சான் கொண்டாந்து கொடுத்தான்... நூறு ரூவா கேட்டியே...'' கதிரேசன் நீட்டினான்...

''அடேடே... அதுவா... என்னோட பிரெண்ட் ஒருத்தருக்குன்னு கேட்டேன்... வெச்சுக்க... வேற சமாளிச்சுட்டேன்...'' கனகப்பன் திருப்பிக் கொடுத்தான்.

சடகோபன் உள்ளத்தில் கேவல்...

''போறவு பார்க்கறேன்... வர்றேன்...'' கதிரேசன் போனான்.

''பாருங்க சார்... உங்களுக்குன்னு சொன்னதுதான்... நல்லவேளையா உங்க பணமே வந்துடிச்சே... இல்லேன்னு அநியாயமா நாலு நாளைக்கு அரையாத வட்டி கொடுக்கும்படி இருக்கும்... நல்ல மனுஷங்களுக்கு சோதனை வந்தாலும் சரியாயிடும்..'' என்று கூறி பஸ் ஸ்டாண்டில் விட்டுவிட்டு விடைபெற்றுக் கொண்டான்...

போலி கௌரவத்தால் ஜனித்த புழு ஒன்று உள்ளத்து வேதனையில் நீச்சல் போட்டது..

---

# நிமிடத்துக்கொரு நிறம்

நல்லவேளையாக இவர்கள் அமர பஸ்ஸில் இடம் இருந்தது.

வழிமறித்த பெரிய கூடையை எடுத்து மடியில் வைத்துக் கொண்டு கால்களைமடக்கி ஜன்னலோரப் பகுதிக்குப் பாதை ஏற்படுத்திக் கொடுத்தாள் அதில் உட்கார்ந்திருந்த நடுத்தர வயதுப்பெண்.

ரமேஷ் ஜன்னலோரத்தில் உட்கார்ந்து கொள்ள, கையிலிருந்த கர்சீப்பால் சர்வ ஜாக்கிரதையாகத் தூசு தட்டிவிட்டுபக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள் பாலாமணி.

ரமேஷ் ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தான். கசுக்கழியாத மஞ்சள் கயிறும், கண்களைப் பறிக்கும் நகைகளுமாக, பாந்தமான பட்டுப் புடைவையில் மனசைக் கவ்விப் பிடித்தாள் பாலாமணி.

புதிதான பெண் வாசனை உடம்பெங்கும் கிளியைப் புரியக் கொஞ்சம் நெருங்கி உட்கார்ந்தான். அந்தக் கூடைக்காரப் பெண் மடியிலிருந்து கூடையை விடுவித்து, பழைய படி வழிபடைத்து விட்டு, சுருக்குப்பையில் புகையிலை தேடிக் கொண்டிருந்தாள். நிறையக் கோணிச் சாக்குத் துருத்தி இருந்த கூடையிலிருந்து காய்ந்த மீன்கள் தம்மை விளம்பரப்படுத்திக் கொண்டிருந்தன.

''சே, நாத்தம் குமட்டுதுல்லே பாலா!''

அவன் காதோரம் பட்டும் படாமலும் இதழ் ஸ்பரிசம் ஏற்படுத்திக் கிசுகிசுத்ததில் ஒரு சுகம் இருந்தது அவனுக்கு.

''ம்ம்ம்''— லேசாக நெளிந்து வெட்கப்பட்டதில் அவனுக்குப் பெருமையாய் இருந்தது. அவன் ஒரு முறை சுற்றி வர பஸ்ஸுக்குள் பார்வையை ஓட விட்டதில் பலஜோடிக் கண்கள் தங்களையே துளைத்துக் கொண்டிருப்பதை உணர்ந்தான். அந்த உணர்ச்சியில் லேசாகப் பெருமிதம் ஊன்றி மதர்ப்பேறச் சுற்றுப்புறத்தை அலட்சியப்படுத்தத் தோன்றியது அவனுக்கு.

''சார் டிக்கெட்'' — என்ற கண்டக்டரிடம் ''ரெண்டு மேச்சேரி'' என்றவன் கூடவே, ''நூறு ரூபாய்க்கு சில்லறை இருக்கில்லே'' என்று உலகத்திலேயே இவனிடம் மட்டுமே நூறு ரூபாய் இருப்பது போன்ற எகத்தாளத் தொனியில் கேட்டான்.

கண்டக்டர் டிக்கட்டைக் கிழித்துக் கொடுத்துவிட்டு உதட்டைப் பிதுக்கியபடி நகர்ந்தார்.

''சே இவ்வளவு புவர் கலெக்‌ஷனிலே ஏன்தான் வண்டியை ஓட்டறாங்களோ'' என்று எரிச்சலோடு அலுத்துக்கொண்டான். பர்ஸைத் துழாவிப் பத்து ரூபாயை எடுப்பதற்குள் கண்டக்டர் அடுத்த கோடிக்குப் போய் விட்டிருந்தார்.

''பேசாம ஸ்கூட்டர்லேயே வந்திருக்கலாம்'' என்று சப்தமாக முணுமுணுத்துக் கொண்டவன், பாலாமணி கர்ச்சீப்பால் மூக்கைப் பொத்திக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் கூடைக்காரி மேல் வள்ளென்று விழுந்தான்.

''ஏம்மா — நாத்தம் குடலைப்புரட்டுது— கூடையை இந்தப் பக்கமாகவே தள்ளி வைக்கிறியே— அப்பிடி முன்னாலே போடறது தானே.''

அவன் போட்ட சத்தத்தில் நிறையபேர் கவனம் சிதறினர். கூடைக்காரி பதில் பேசாமல் கோணியை மேலும் அமுக்கி மூடித் தன் பக்கமாகக் கொஞ்சம் நகர்த்திக்கொண்டாள்.

''எப்படி என் திறமை'' என்பதுபோல் பாலாமணியை அவன் பார்த்த பார்வையில் கர்வம் வழிந்தது.

புதுப் பெண்டாட்டியிடம் தன்னைப்பற்றிய 'இமேஜ்' இறுக்கமாக நின்றுவிட்ட திருப்தியோடு இரண்டு கைகளாலும் கிராப்பைக் கோதிக் கொண்டான்.

தன் விஷய ஞானத்தை அவளிடம் விளம்பரப்படுத்திக் கொள்ளும் நோக்கத்தில் மேச்சேரி பற்றியும், அங்கிருக்கும் பத்திர காளியம்மன் கோவில் பற்றியும், அமாவாசையின் போது அங்கு குவியும் கூட்டத்தைப் பற்றியும், வளவளவென்று உண்மை கால்வாசியும், உளறல் முக்கால் வாசியுமாகக் கொட்டிக் கொண்டிருந்தான்.

பாலாமணி ஆர்வத்தோடு கேட்டதாக அபிநயித்துக் கொண்டிருந்தாலும், ஏதோ புது அவஸ்தைக்குள்ளாகித் தவிப்பதுபோல ஒரு நினைப்பு அவனை நெருடும் சந்தர்ப்பத்தில் சட்டென்று தன் பேச்சை நிறுத்தி, ''டீனிதிங்ராங்'' என்று ஸ்டைலாகக் கேட்டான்.

பாலாமணி தாழ்ந்த குரலில், ''பின்னாலே உட்கார்ந்திருக்கிறவரோட கால் ரொம்ப



-எஜரா-

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி'84
ரூ500/- இரண்டாம் பரிசுக் கதை

நேரமா என் கால் மேலே பட்டுட்டே இருக்கு'' என்று திணறினான்.

ரமேஷ் ஆத்திரத்தோடு திரும்பிப் பின் ஸீட்டைப் பார்த்தான். பாலாமணிக்கு நேராகப் பின் ஸீட்டில் சரிந்து உட்கார்ந்து தூங்கிக் கொண்டிருந்த ஆளைப் பார்த்ததும் அவனுடைய வேகம் கொஞ்சம் மட்டுப் பட்டது.

இவனை மேட்டூரில் நிறைய இடங்களில் ரமேஷ் பார்த்திருக்கிறான். சில தெருச் சண்டைகளிலும், சினிமா தியேட்டர் தகராறிலும் இவன் நிரம்ப பரிச்சயப்பட்டிருப்பது ரமேஷுக்கு ஞாபகம் வந்தது.

புஸ்தி மீசையும், பெரிய உடம்புமாக அவன் தோற்றம் பயமுறுத்துவதாய் இருந்தது.

வாஸ்தவத்தில 'நறுக்' என்று நாலு வார்த்தை கேட்டுவிட வேண்டும் என்றுதான் திரும்பி இருந்தான் ரமேஷ். ஆனால் ஒரு தயக்கம் சட்டென்று நாக்கைக் கட்டிப் போடக் கொஞ்சம் தடுமாறினான்.

இதற்குக் காரணம் பயமா? இல்லை தேவையற்ற சலசலப்பை உண்டு பண்ண விரும்பாத மேம்போக்குத் தனமா என்று ரமேஷுக்கே புரிபடவில்லை. பாலாமணி வேறு பரிதாபமாக இவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''பாவம் — நல்லாத் தூங்கிட்டு இருக்கார் தூக்கத்திலே தெரியாம கால் பட்டிருக்கும். நீ கொஞ்சம் நகர்ந்து உட்கார்ந்துக்கோயேன் பாலா.''

''எப்படி நகர்ந்தாலும் கால் பட்டுக் கிட்டே தான் இருக்கு. அவரை எழுப்பிக் கொஞ்சம் காலை எடுத்துக்கச் சொல்லுங் களேன்.''

அந்தக் கணத்தில் ரமேஷுக்கு பாலா மணியைக் குதறிவிடும் அளவுக்குக் கோபம் பீறிட்டது. லேசாகக் கால் பட்டால் இவள் என்ன கரைந்தா போய்விடுவாள் என்று மன சுக்குள் குதர்க்கம் பேசிக் கொதித்துப்



**உதைக்கும் உவமை!**

உதிர்ந்து விடுகின்ற மலரோடு
உன்னை என்னால்
ஒப்பிட முடியவில்லை.
தேய்ந்து விடுகின்ற நிலவோடு
உன்னை என்னால்
ஒப்பிட முடியவில்லை—
அணைந்து விடுகின்ற விளக்கோடு
உன்னை என்னால்
ஒப்பிட முடியவில்லை.
நீ என்றும் நீதான்
உனக்கேது உவமை?

—வெ. இறையன்பு

போனான். இந்தத் தீண்டலையே அவள் அனு மதித்து விட்டுப் பேசாமல் இருந்திருந்தால் இவன் என்ன குதிகுதித்திருப்பான் என்பதைச் சுட்டிக்காட்ட வாய்ப்பின்றி அவன் அறிவு ஸ்தம்பித்துக் கிடந்தது.

சில சந்தர்ப்பங்களில் தவிர்க்க முடியாமல் தலைநீட்டிவிடும் இந்தக் கோழைத்தனத்தை ஜெயிக்க முடியாத ஆதங்கம் உடம்பில் உஷ்ணமேற்ற முகம் இறுகிப்போனான்.

அவன் ஒரு தீர்மானத்துக்கு வந்து தூங்கிக் கொண்டிருந்தவன் பக்கம் திரும்புவதற்குள் ரோட்டின் குறுக்கே போன எதையோ காப்பாற்ற டிரைவர் பிரேக்கையும், ஹார

னையும் ஒருமுகமாக அழுத்தியதில் ஏற்பட்ட தொந்தரவினால் அவன் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான். கண்கள் சிவப்பேறி நெருப் பாகப் பளபளத்துக் கொண்டிருந்தன. ஒருவேளை நிறையக் குடித்திருப்பானோ?

ரமேஷ் அவன் பார்வையைச் சந்திக்க இயலாமல் கீழே குனிந்து கொள்ளவும், அவன் நிதானமாகத் தன் கால்களை பாலா மணி பக்கமிருந்து இழுத்துக் கொண்டு அசட்டையாக 'ஸாரி' என்று முனகினான்.

ரமேஷ் உடனே தன் பாதங்களுக்கு யாரோ புஷ்பாஞ்சலி செய்தது போலப் புளகித்துப் போய் ''இட்ஸ் ஆல்ரைட்'' என்றபடி அவனை மன்னித்து விட்ட தோர ணையில் இளித்தான்.

பாலாமணி கடந்த ஒரு வாரமாக 'கணவன்' என்று இணைக்கப்பட்டிருக்கும் உறவின் ஆழம் காண முடியாத குழப்பத் தில் பேச்சை மறந்தாள்.

''நான் கூட யாரோன்னு நினைச்சேன்— அவர் எனக்குத் தெரிஞ்சவர் தான் பாலா.''

ரமேஷ் சொல்வதின் பொருள் புரியாமல் பாலாமணி தலையாட்டி வைத்தாள்.

தெரிந்தவன் என்பதால் அவன் கால்படு வதை அனுமதிக்கலாம் என்கிறாரா. இல்லை இதைப் போய்ப் பெரிதுபடுத்தி அவனிடம் கேட்கக் கூடாது என்று சமாதானம் சொல் கிறாரா இல்லை, தன் கையாலாகாத்தனத் துக்கு ஒரு சப்பைக்கட்டுக் கட்டுகிறாரா? எந்த எழவும் புரியாமல் ரோட்டின்மேல் பார்வையைச் செலுத்தினாள் பாலாமணி.

ரொம்பநேரம் அவளால் அப்படி இருக்க முடியவில்லை. பின்னங்கழுத்தில் குறுகுறு வென்றது. முதுகுப் பக்கம் விரல் படும் ஸ்பரிசம் கட்டியது. அந்த பின்ஸீட் ஆசாமி தன் இரு கைகளையும் மடித்து இவளிருந்த ஸீட்டின் மேல் பரப்பி, அதன் மீது தன் தலையைக் கிடத்தி சுகமாகத் தூங்கிக்கொண் டிருந்தான். அவன் முழங்கை இவளுடைய தலைமுடியைச் சிறைப்படுத்திக் கொண்டிருந்



சின்னஞ்சிறு காயத்தில்கூட அழுக்குப் புகுந்துவிடும்
இதனால் காயம் பெரிதாகும், கஷ்டம் உருவாகும்.

# உடனடியாக பாண்ட்-எய்ட் உபயோகியுங்கள்

உலகில் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்—அது, காயங்களில் அழுக்குப் புகாமலும், தொற்றிலிருந்தும் காயங்களைப் பாதுகாக்கிறது.

ஆகவேதான் பாண்ட்-எய்ட் முழுப் பாதுகாப்பானதாகும். பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிருபணமான ஆன்டிசெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலுள்ள நுண்துளைகள் காயங்களை விரைந்தாற்றிட உதவுகின்றன. ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**கைவசம் வைத்திருங்கள் பாண்ட்-எய்ட்**
**ஏனென்றால், காயங்கள் எங்கும் எந்நேரமும் ஏற்படலாம்.**

Johnson & Johnson

OBM/7513 TAM

தது. அவன் மூச்சுக் காற்று முதுகுப்புறத்தைச் சீண்டிக் கொண்டிருந்தது.

பாலாமணி நெளிந்தபடி ரமேஷைப்பார்த்தாள். ரமேஷ் கண்களை மூடித்தூங்கிக் கொண்டிருந்தான். இல்லை... இல்லை... தூங்குவதாகப் பாசாங்கு செய்து கொண்டிருந்தான்.

அவனுக்குத் திரும்பவும் அந்த ஆசாமியை எழுப்பி, விஷயத்தைச் சொல்லி, விலக்கி வைப்பது வீண் வேலையாகப் பட்டது. ஒருவேளை அவன் பழக்கதோஷத்தில்வேண்டுமென்றே ,கராறுக்குத் தயாராகி விட்டால், பஸ்ஸுக்குள்ளிருக்கும் கூட்டத்துக்கு முன்பு அவனுக்குச் சமமாக வார்த்தையாட முடியாமல் மானம் கெட நேரிடலாம்.

இந்த விஷப் பரீட்சையில் இறங்குவதற்குப் பதில் பேசாமல் கொஞ்சம் முன்னே தள்ளி உட்கார்ந்து கொண்டால் பிரச்சினையே இல்லை.

பாலாமணி தன் அசௌகரியத்தை முறையிட மீண்டும் "என்னங்க" என்று ஆரம்பித்தபோது ரமேஷ் அதைத்தான் சொன்னான்.

"கொஞ்சம் முன்னால நகர்ந்துக்கோ பாலா — இன்னும் கொஞ்ச தூரம்தான். அப்புறம் இறங்கிடலாம்."

"கொஞ்சம் கையையாவது எடுக்கச் சொல்லுங்களேன் — என் தலைமுடி சிக்கிக்கிட்டு இருக்கு."

ரமேஷ் கொஞ்சம் காட்டமாகவே அவளருகே குனிந்து இரைந்தான்.

"பப்ளிக் பிளேஸ்லே நீ எப்படி பிஹேவ் பண்ணணும்ங்கறதைக் கத்துக்கணும் பாலா. சும்மா தொண தொணன்னு பேசிக்கிட்டு எவக்கு ஒரே ஹெட் ஏக்கா இருக்கு."

பாலாமணி சட்டெனச் சும்பிப்போனாள். ஓரிரு பக்கத்துப் பிரயாணிகள் கண்குத்திப் பாம்பாக இவர்களையே பார்த்துக் கொண்டிருந்தனர். ரமேஷ் ஆயாசத்தோடு தலையைப் பிடித்துக் கொண்டு ஜன்னலோரம் சாய்ந்து கொண்டான்.

தன்னுடைய இந்த மெத்தனம், விளைவுகளை எதிர்கொள்ளத் தயங்கும் கோழைத்தனமோ என்று கணநேரம் சந்தேகித்து, விபரீத விளைவுகளை எதிர்பார்த்து,அவற்றைத் தவிர்ப்பது மிகப் பெரிய புத்திசாலித்தனம் என்று அடுத்தகணமே சமாதானமானான். ஆனால்...

அவர்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஆந்தக் கூடைக்காரி விருட்டென்று

குடிப்பது ஒரு தீய பழக்கம் என்று மட்டுமே தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறார்களே தவிர குடிப்பழக்கம் மூளை, கல்லீரல், இருதயம், வயிறு, நரம்பு மண்டலம் ஆகியவற்றைப் பாதிப்பதோடு பல நோய்களுக்கும் அதுவே வித்தாகிறது என்பது பலருக்குத் தெரியாது. 0.2 சதவீதம் ஆல்கஹால் இரத்தத்தில் இருந்தால் அது ஒருவனைப் பைத்தியம் போல் ஆக்கிவிடும். 0.5 அல்லது 0.6 சதவீதம் ஆல்கஹால் இருந்தால் அவன் அரக்கனாகிறான். 0.7 சதவீதம் இருந்தால் அவன் அமரனாகிறான்.

ஆர். எஸ். சுப்பிரமணியன்.



பின்னிட் ஆசாமியின் கையில் தட்டி, "இந்தாய்யா" என்று அதட்டினாள். அவன் பதறி விழித்துப் பார்வையை உருட்டினான்.

"என்னய்யா முறைக்கறே. நானும் அப்போதிலே இருந்து பார்க்கறேன். ஏதோ உன் சொந்த வண்டியில குந்திக்கிட்டு இருக்கற மாதிரி உன் சௌகரியத்துக்குப் படுத்துக்கிட்டு வாரே; முன்னால ஆளு இருக்கறது தெரியல? இந்தப் பொண்ணு எந்நேரமாத் தவிச்சுக்கிட்டு இருக்கு ..ம்... பொது இடம்னு கொஞ்சம் பொறுப்போட நடந்துக்கத் தாவல..."

கூடைக்காரியின் கூக்குரல் மரத்துப்போயிருந்த ஓரிருவரின் நியாய உணர்வுகளைச் சிலுப்பி விட சந்தடிசாக்கில் ஆளாளுக்குச் சட்டம் பேசினர்.

கண்டக்டர் வந்து சமாதானப்படுத்தி அந்தப் பின் ஸீட் ஆசாமியை எழுப்பி, கடைசி வரிசைக்கு இடம் மாற்றினார்.

ரமேஷ் ஒரு பெரிய பாரம் அகன்ற திம்மதியோடு அங்கிருந்தவர்களிடம் தான் நாகரீகம் கருதி அந்த ஆசாமியை விட்டு விட்டதாக உள்ளடங்கிய குரலில் வீராப்பு பேசிக் கொண்டிருந்தான். கூடைக்காரி எதுவுமே நடக்காதது போல அடுத்த ஸ்டாப்பிங்கில் இறங்கிக் கொண்டாள்.

தன் மனத்தின் நிறம் மாறலைப்பற்றிய எந்தப் பாதிப்பும் இல்லாதவனாக, பழைய உற்சாகத்துக்குத் தாவி, பாலாமணியின் சிரமக்ஷிணைப் பற்றிக் கவலைப்படாமல் அரட்டையடிக்க ஆரம்பித்தான் ரமேஷ்.

அப்போதும் சரி, மேச்சேரியில் இறங்கி ஸ்வாமி தரிசனம் செய்த போதும் சரி, அதற்குப் பின் பஸ் பிடித்து வீட்டுக்குவந்த போதும் சரி, பாலாமணி நிறைய மௌனம் சாதித்தாள்.

அதை 'வெட்கம்' என்று ரமேஷ் பொருள் படுத்திக் கொண்டு புல்லரித்துப் போனதோடு எல்லாவற்றையும் மறந்து போனான்.

# இதோ எளிதில் உபயோகிக்கக்கூடிய ஒரு ஹேர்-டை, மிகமிகக் குறைந்த விலையில்!

கோத்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.
இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது, ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்!
மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!



**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவிவிடுகிறது. உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தை தருகிறது!






இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர்-டை இது ஒன்றே.

Godrej
பவுடர்
ஹேர்-டை
கான்ஸென்ட்ரேட்

CLARIAN/GS/11/203 TAM

**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

# சொல் ஒன்று வேண்டும்



## 31

எத்திராஜ் சொன்ன செய்தியைக் கேட்டுத் திகைத்து நிற்கிறார் பரந்தாமன்.

"நிஜமாவா சொல்றே..."

"ஆமாங்க... கும்பகோணம், மாயவரம் பக்கத்துல ராஜா மாதிரி ஒரு ஆள் நடமாடறதா தகவல் வந்தது..."

"யார் சொன்னது?"

"என் சிநேகிதன்... 'அவன் நம்ம ராஜாவை நிறைய தடவை பார்த்திருக்கான்..."

"உம்..."

பரந்தாமன் தம் அறைக்குள்ளேயே அடிபட்ட புலி மாதிரி, குறுக்கும் நெடுக்குமாய் நடக்கிறார்...

"அவன் இன்னொன்றும் சொன்னாங்க..."

"என்னது?"

"ராஜா இங்கே இருக்கறது உங்க எசமானுக்குத் தெரியாமத்தான் போயிருக்குமா என்ன... எல்லாம் தெரியும்... தன் கையாலேயே தன் பிள்ளையைப் பிடிக்க வேண்டாம்னு தான் அமுக்கமா உட்கார்ந்திருக்கார்னு சொன்னாங்க... எனக்கு ஆத்திரம் தாங்கலே. இழுத்து வச்சு, ஓங்கி ஒரு அறை விட்டுட்டு வந்தேன்..."

அவன் மேலே ஏதும் சொல்லத்தொடங்குவதற்கு முன் 'விருட்'டென அவர் தொலைபேசி பக்கம் திரும்புகிறார்...

குறிப்பறிந்து நடப்பது போல — எத்திராஜ் அந்த இடத்தை விட்டு நகருகிறான். அவனைப் பொறுத்த வரையில் சொல்ல வேண்டியதைச் சொல்லியாகி விட்டது... இது மட்டுமில்லே, வழக்கம் போல, கையெழுத்தை மாற்றிக் கொண்டு, போலீசுக்கு ஒரு மொட்டைக் கடிதமும் எழுதிவிட்டான்.

'தஞ்சை மண்ணில் ராஜா — ராஜபோகமாக வாழ்ந்து வருகிறான்... கடமை வீரரான பரந்தாமனுக்கு, இது விஷயம் தெரியாதா என்ன... இனியும் மெத்தனமாக அவர் இருந்தால்... சீசீ... வெட்கக்கேடு.. உமக்கெல்லாம் எதற்காக ஐயா காக்கிச் சட்டை? அவரது விருதுகளைப் பிடுங்கிக் கொண்டு, மகனுக்கு உடந்தையாக இருந்த காரணத்தைத் தயங்காது சுட்டிக்காட்டி, இரும்புக் கம்பிகளுக்குப் பின்னால் நிறுத்தி வையுங்கள்.

இப்படிக்கு அநீதியை எதிர்க்கும்,
அநாதை இந்தியன்

பரந்தாமன், மேலிடத்துக்கு எத்திராஜ் சொன்ன விஷயங்களைப் பற்றித் தகவல் கொடுப்பதற்காக 'ஃபோன் செய்ய...

"எங்களுக்கும் லெட்டர் வந்திருக்கு... என்ன பண்ணப் போறீங்க..."

அதிகாரியின் கேள்வியிலிருந்த கிண்டல், பரந்தாமனின் வெந்த இதயத்தில் வேலைப் பாய்ச்சுவது போல...

"நான் நாளைக்கு ராத்திரி கிளம்பித் தஞ்சாவூர் போறேன்... கும்பகோணத்துக்கு அடுத்து இருக்கிற கிராமத்துல ஆடிகிருத்திகை வருது... எங்க குலதெய்வம் முருகன் இருக்கற ஊர் அது... முந்தியெல்லாம் வருஷம் தவறாம... — இந்த ஆடிகிருத்திகை விழாவுக்கு காவடி எடுக்க, எங்க குடும்பமே போகும்... கடைசியாப் போனது —ராஜாவுக்குக் கல்யாணமான வருஷம்... இந்த வருஷம் — என் பேரன் காவடி எடுக்கப் போறான்..."

"அதுக்கும், கேஸுக்கும் என்ன சம்பந்தம் மிஸ்டர் பரந்தாமன்"

"என் பேரன் முருகனுக்குக் காவடி எடுக்கப் போறது — அவனோட அப்பா கிடைக்கணும்கறதுக்காக, நான் போறது— ஒரு கொலைகாரனைப் பிடிக்கணும்கறதுக்காக. என் பேரன் 'அப்பா'ன்னு ஆசையா அழைக்கற நாளும் ரொம்ப தூரத்துல இல்லே... நான், 'நீயெல்லாம் என் மகனா'ன்னு கொலைகாரன் மூஞ்சியிலக் காறித் துப்பற நாளும் வெகு தூரத்துல இல்லே..."

"பெஸ்ட் ஆஃப் லக், கிளம்புங்க.. இந்த முயற்சிதான் உங்களோட கடைசி முயற்சியாகவும், எங்களோட கண்ணிய மிகுந்த போலீஸ் ஆபீஸர் மிஸ்டர் பரந்தாமனோட நல்ல பெயரை நிலைநிறுத்தற முயற்சியாகவும் இருக்கட்டும்..."

ரிஸீவரை அதனிடத்தில் வைத்த பரந்தாமன் தம் அறையை விட்டு வெளி வந்து, இரைந்து மனைவியை அழைக்கிறார்:

"மீனாட்சி!"

"என்னங்க...?"

"இந்த வருஷ ஆடி கிருத்திகைக்கு நானும், என் பேரனும் முருகனுக்குக் காவடி எடுக்கப் போறோம்... நாளைக்கு கிளம்பித் தஞ்சாவூர் போறோம்..."

மீனாட்சி, தன் காதுகளையே நம்ப முடியாதவளாய்த் திகைத்து நிற்கிறாள். ஏன், உமா கூட...

எத்தனையோ முறை வருந்தி வருந்தி அழைத்தாலும் பரந்தாமன், இது போல்

அனுராதா ரமணன்

கோவில், குளமென்று அத்தனை சீக்கிரத்தில் கிளம்பி விட மாட்டார். ராஜாவின் திருமணம் முடிந்த கையோடு இதுபோல காவடி எடுத்து, குல தெய்வதுக்கு பூஜை செய்ய வேண்டுமென மீனாட்சி சொன்ன போது— இதே பரந்தாமன் எத்தனை ஆட்சேபணைகளைத் தெரிவித்திருக்கிறார்!

''நான் வரணுமா மீனாட்சி? எனக்குப் பதிலா நீ போய் வேண்டிட்டு காவடி எடுத்துட்டு வந்துடேன்.''

''நல்லாயிருக்கே... சாமி காரியம் செய்யறப்ப — இப்படி மறுப்புச் சொல்லாதிங்க... தெய்வக் குத்தம் நேர்ந்திட்டா —தலைகீழா நின்னாலும் யாராலும் ஒண்ணும் செய்ய முடியாது...''

''மீனா... சாமி, சாமிங்கறியே... சாமி தனியா எங்கே இருக்கு... உனக்கு சாமி, நான், எனக்கு சாமி — என்னோட கடமை... ஒவ்வொருத்தனும் நேர்மையா நடந்துக்கிட்டா — சாமிக்குத் தனியா காவடி எடுக்க வேண்டியதில்லை... உண்மையைப் பேசினா— முருகனுக்கு ஸ்பெஷல் அபிஷேகங்கள் எதுவும் செய்ய வேண்டியதில்லை... கடமையில இருந்து தவறாம இருக்கறதை விட — நித்திய பாராயணம் வேற கிடையாது...''

இப்படி — இத்தனை சொல்லியும், மீனாட்சி கேட்காததால் — அவளது திருப்திக்காகவே கோவிலுக்குக் கிளம்பியவர்...

இன்று அவராகக் கிளம்புகிறார். அதுவும் பேரனுடன்...

உமாவினால் மறுத்துச் சொல்ல முடியவில்லை. வேறு எங்காவது அவர் குழந்தையை அழைத்துப் போக வேண்டுமென்று



சொல்லியிருந்தால் – நிச்சயம் ஒப்புக்கொண்டிருக்க மாட்டாள்...

அன்றைக்கு – குழந்தை, தாத்தாவின் மடியிலமர்ந்து துப்பாக்கியுடன் விளையாடிய போது – உமா எழுப்பிய கூக்குரலுக்குப் பிறகு – அவர், அதிகமாய்ப் பேரனை அழைத்துக் கொஞ்சுவதே இல்லை... அவன் விளையாடிக் கொண்டிருக்கையில் ஒருகணம் நின்று பார்த்து விட்டுப் போவார்... ஒரு கணம்தான். அதற்கு மேல் நிற்கமாட்டார்.

சின்னக் கண்ணனுக்கு மாத்திரம் வயசாக வில்லையா என்ன... ஐந்து வயதாகிறதே... கான்வென்ட்டில் படிக்கிறான்... இவனைப் பள்ளியில் சேர்க்கும் பொழுது – உமாவுடன், பரந்தாமன் தான் போயிருந்தார். நுழைவுத் தாளில் தகப்பனார் அல்லது போஷகர் பெயர் என்கிற வரியில் தகப்பனார் என்கிற வார்த்தையை அவர் அடித்த போது...

உமா, பொங்கி வரும் துக்கத்தை அடக்கும் வழி தெரியாது, அங்கிருந்து நகர்ந்து விட்டாள்.

சின்னக்கண்ணனுக்கு விவரம் தெரிந்து கேட்ட முதல் கேள்வி:

''அப்பா எங்கேம்மா?''

இதை அவன் கேட்ட பொழுது, உமா இருந்த அதே ஹாலில் பரந்தாமனும்தான் இருந்தார். ஒரு விநாடி, நிலைகுலைந்துபோன உமா – உடனே சமாளித்துக் கொண்டு பதிலளித்தாள்:

''அமெரிக்காவுல இருக்கார்டா...''

''எப்ப வருவார்?''

''உம்... சீக்கிரம் வந்துடுவார்...''

''அப்பா வரப்போ எனக்கு என்ன வாங்கிட்டு வருவார்?''

''உனக்கு என்ன வேணும்?''

''தாத்தா மாதிரி காக்கி டிரஸ், தொப்பி, துப்பாக்கி, மீசை, எல்லாம் வேணும்... வாங்கித் தருவாரா...''

இந்த இடத்தில் பரந்தாமன் நெகிழ்ந்து விட்டார். உடனே, தாவி, பேரனைத் தூக்கி, முத்தமிட்டு இறக்கினார்.

''இது பெரிய விஷயமாடா? நான் வாங்கித்தரேன் உனக்கு...''

''உங்களை மாதிரி மெடல், ஸ்டார் எல்லாம் வேணுமே...''

''உம்... அதெல்லாம் நீ பெரியவனானப் புறம், போலீஸ்லே சேர்ந்தாத்தான் கிடைக்கும்.''

''நான் இப்பவே போலீஸ்லே சேர்றேன். எனக்கும் ஒரு துப்பாக்கி வாங்கித் தாங்க... டுமீல் டுமீல்னு சுடறேன்...''

இதற்குமேல் அவனைப் பேச விடாமல் உமா அவனைத் 'தரதர'வென இழுத்துச் சென்று விடுவாள்.

அப்போர்ப்பட்டவன், மாமனார் – குலதெய்வத்துக்குக் காவடி எடுக்க வேண்டும் என்று சொன்ன போது...

மறுக்க முடியவில்லை.

'ஒருவேளை, தெய்வக் குற்றம்தான் இது எல்லாவற்றிற்கும் காரணமோ...'

'ஐந்து வயது கூட நிரம்பாத பாலகன் காவடி எடுத்தால் இரங்காத தெய்வம் கூட உண்டா என்ன?'

'எல்லாம் இருக்கிறபடி இருந்திருந்தால்– சின்னக்கண்ணனுக்கு ஒரு வயசு பூர்த்தியான பொழுதே, முடியிறக்கி காது குத்த– அங்கு அழைத்துப் போயிருக்க வேண்டும்...'

இத்தனை நினைப்புகளும் நெஞ்சை ஆக்கிரமிக்க, அவள் தன் மாமியாருடன் பயண ஏற்பாடுகளைக் கவனிக்கிறாள்...

ராஜாவின் மறைவுக்குப் பிறகு, அந்த வீட்டை விட்டு வெளியூர் கிளம்புவதென்பது – அதுதான் முதல் தடவை...

அதுவும் அந்தக் கிராமத்தில்...

கிராமமென்று சொல்வதற்கில்லை, பட்டிணத்தின் சில நாகரீகங்களும், கிராமங்களுக்கே உரிய இயற்கை அழகும்... ஒரு பக்கம் இப்பொழுது தான் ஆரம்பிக்கப் பட்டிருக்கும் சிறு தொழிற்சாலைகளும்... இன்னொரு பக்கம் வயல்வெளியும், மதுரை வீரன் சிலையும், மாரியம்மன் கோவிலும்...

உமாவிற்குத் தான் திருமண மெருகு குலையாமல் அந்தக்கிராமத்துக்கு வந்ததெல்லாம் நினைப்புக்கு வர...

மீனாட்சிக்குத் துருதுருவென பக்திப்பரவசத்துடன் முருகனுக்கு அழுக்காமல்,

## சிறைப்பட்ட சுதந்திர தேவி!

அமெரிக்காவில் சுதந்திரதேவி சிலையைப் பழுது பார்த்துப் புதுப்பிக்கத் திட்டமிட்டு வேலைகள் நடந்து வருகின்றன. இதற்காக அலுமினியக் குழாய்களால் சாரம் கட்டியதில் சிலை சிறைப் பட்டது போல் மறைந்தும் மறையாமலும் இப்படித் தோற்றமளிக்கிறது. (இடது) சிலையின் கரத்திலுள்ள தீப்பந்தத்தைச் சுற்றிச் சாரம் கட்டும் பணியில் ஒரு தொழிலாளி ஈடுபட்டிருக்கிறார் (வலது). தொலைவில் நியூயார்க் நகரம். இந்தத் திருப்பணிக்கு ஏராளமாய்ச் செலவாகுமே? பணம்? மக்கள், நிறுவனங்களின் நன்கொடைகளே!



சலிக்காமல் சந்தனம் அரைத்தும், மாலே தொடுத்துக் கொடுத்தும் வண்டு மாதிரிப் பறந்த விஜியின் ஞாபகம் அதிகரிக்க...

பரந்தாமனுக்குத் தூரத்து உறவினர் வீட்டில் தான் தற்காலிக ஜாகை, எப்பொழுதும் அப்படித்தான். இவர்கள் வருவதற்குமுன்பே கடிதம் எழுதித் தங்களது வருகையைத் தெரிவித்து விடுவார்கள். கிராமத்து ஜனங்கள் மிகுந்த சந்தோஷத்தோடு இவர்களது தேவைகளைப் பார்த்துப் பார்த்துப் பூர்த்தி செய்வார்கள்...

இந்த முறை – சொல்லி வைத்தாற்போல யாருமே ராஜாவைப் பற்றிய பேச்சையே எடுக்கவில்லை, ஆறி வரும் புண்ணைக் கிளறிப் பார்க்க விரும்பாதவர்கள் போல...

பரந்தாமன், தன் வழக்கத்துக்கு விரோதமாய்ப் பட்டு வேட்டியும், அங்கவஸ்திரமுமாய் மூன்று வேளையும் சின்னக்கண்ணனின் கையைப் பிடித்துக் கொண்டு கோயிலுக்குப் போய் வந்தார்.

திருவிழாக் கும்பலில் சிறுவனோடு சிறுவனாய்த் தாமும் நின்று ஒவ்வொன்றையும் ரசிக்கிறார்... குழந்தைக்கு ஊதலும், கண்ணாடியும், பலூனும் வாங்கித் தந்து மகிழ்கிறார்...

கிருத்திகையன்று – தாத்தாவும் பேரனுமாய் உடம்பு முழுக்கத் திருநீறைப் பூசிக் கொண்டு, காவடி எடுத்துக் கோயிலுக்குப் போன போது...

கூடியிருந்த கிராமவாசிகளுக்கே கண்களில் ஈரம் படருகிறது...

பக்தர் ஒருவர் உருகி உருகி, கண்ணீர் பெருக பாடிய அருட்பா – பரந்தாமனையே கண் கலங்கச் செய்வதாய்...

''பெற்றதம் பிள்ளைக் குணங்களை எல்லாம்
பெற்றவர் அறிவரே அல்லால்...
மற்றவர் அறியார் என்றனை ஈன்ற
வள்ளலே மன்றிலே நடிக்கும்...''

பாட்டும், கரகமுமாய் மாலே மூன்று மணி வரையில் அபிஷேக ஆராதனைகள் முடியும் சமயத்தில்...

சின்னக்கண்ணன் அதுவரையில் தோளில் இருந்த காவடிச் சுமை இறங்கியதும், உறவினர் வீட்டுக் குழந்தைகளுடன் ஆரவாரமாய்ச் சிரித்தபடி கோயிலின் வெளிமண்டபத்தில் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருக்கிறான்...

பரந்தாமனின் கவனம் பஜனை கோஷ்டியிலும், கரக ஆட்டத்திலும் இருப்பது போலத் தோன்றினாலும், பட்டு வேட்டியில், அங்கவஸ்திரத்தின் மூடிய மறைப்பில், இடுப்பில் செருகப்பட்டிருந்த கைத்துப்பாக்கி 'நீ வந்த வேலே வேறு, வேறு' என அடிக்கடி நினைவூட்டிக் கொண்டே இருக்கிறது.

அவர், சற்றைக்கொரு தரம் திரும்பிப் பெண்கள் கூட்டத்தில் இருக்கும் மீனாட்சியையும், உமாவையும் பார்க்கிறார்...

மீனாட்சி முருகனின் மீது வைத்த பார்வையை நகர்த்தவில்லே, உமாவோ... முருகனை ஏறிட்டுப் பார்க்கப் பிடிக்காதவளாய்த் தலேகுனிந்து, முகம் வெந்து, மூக்கில் சுடர் விடும் வைரத்தை விடவும் பிரகாசமாய், கன்னக் கதுப்புக்களில் சில பல வைரங்கள்...

எத்திராஜ், தெருவில் விளையாடும் சின்னக் கண்ணனையே பார்த்துக் கொண்டிருக்கிறான்...

''டேய், போலீஸ் திருடன் விளையாட்டு விளையாடலாமாடா?''

–சின்னக்கண்ணன் தான் ஆரம்பிக்கிறான்.

''ஓ... விளையாடலாமே...''

பத்துப் பதினைந்து சிறுவர்கள் கோரஸ்ஸாக...

''நான் தான் போலீஸ், உங்கள்லே யார்ரா திருடன்?''

குழந்தை, சம்பிரமாய்க் கேட்கிறான்,

''நான் போலீஸா இருக்கேன், நீ திருடனு இரு...''

–வயதில் இவனை விடவும் மூத்த சிறுவன் ஒருவன் நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு முன் வருகிறான்.

சின்னக் கண்ணனின் முகம் ஜிவுஜிவுத்துச் சிவக்கிறது.

''எங்க தாத்தா ஒரு போலீஸ் ஆபீஸர். எனக்குக் கூட பொம்மைத் துப்பாக்கி வாங்கித் தந்திருக்கார். அதனால நான்தான் போலீஸா இருப்பேன்... போலீஸைப்பத்தி உங்களுக்கு என்னடா தெரியும்...?''

''போடா, உங்க தாத்தா போலீஸ் ஆபீசரா இருந்தா எங்களுக்கென்ன.... உங்க அப்பா திருடன்தானே... திருடன் கூட இல்லே... கொலேகாரன்...''

''என்னடா சொன்னே...?''

சின்னக்கண்ணன், அந்த முரட்டுச் சிறுவனின் மீது பாய, இருவரும் கட்டிப்பிடித்துத் தரையில் விழுந்து புரள...

தடுக்கக் கிளம்பிய எத்திராஜைப் பார்வையாலேயே அடக்குகிறார் பரந்தாமன். இதற்குள் மீனாட்சியும், உமாவும் ஓடி வருகிறார்கள்...

பெரிய பையன், சின்னக்கண்ணனின் நெஞ்சு மேல் ஏறி உட்கார்ந்து குத்துகிறான்...

''அடேய் ராஸ்கல்!''

கூட்டத்தைப் பிளந்து கொண்டு கம்பளி போர்த்த, தாடியுடன் கூடிய ஒருவன் ஓடிவந்து, பெரிய பையனை இழுத்து அறைவிட...

இதற்குள் படுவேகமாய்ப் பரந்தாமனின் துப்பாக்கியிலிருந்து புறப்பட்ட குண்டு அந்த மனிதனின் தொடையில் புதைய...

''அம்மா!''

அவன் அலற... அந்தக் குரல் கேட்டு மீனாட்சி திகைத்துப் போகிறாள்...

''ராஜா!''

(தொடரும்)

## வாசகர் பங்கு




**சாரதா சுப்பிரமணியம், சென்னை-61**

1980-ஆம் ஆண்டு கோடையில் கடுமையான தண்ணீர்ப் பஞ்சம். என் பெண் பிரசவத்துக்கு வருவதாய் இருந்தாள். எப்படிச் சமாளிப்பது என்று தவித்துக் கொண்டிருந்த போது மாப்பிள்ளைக்கு ஊட்டிக்கு மாற்றலாகி விட்டதாகச் செய்தி கிடைத்தது. பிரசவம் பார்க்க ஊட்டிக்குப் போய் நான்கு மாதம் குளுமையை அனுபவித்தேன்.

**ச. கொற்கைநிதி, தஞ்சாவூர்-1**

18 வயதில் திருமணமாகி மூன்றே மாதங்களில் விபத்தில் கணவனை இழந்த என் தோழியின் நிலை என்னை வேதனையில் ஆழ்த்தியிருந்தது. ஒரு சித்திரை மாதம் அவள் கணவரின் தோழரே முன்வந்து அவளை மணக்க விரும்பித் திருமணமும் நடந்த போது அந்த சித்திரை எனக்கு தை மாதமாய்க் குளிர்ந்தது.

**ஆர். கலா, கரூர்-1**

ஒரு முறை கோடையில் பெங்களூர் சென்றிருந்த போது ஒரு ஹோட்டலில் ஐஸ்கிரீம் சாப்பிட்டுவிட்டு என் குடையை மறந்து வைத்துவிட்டு வந்து விட்டேன். மீண்டும் போய்ப் பார்த்த போது குடை கிடைக்கவில்லை. ஆனால் சிறு வயதில் குடும்பத்தை விட்டுச் சென்ற தம்பியைப் பார்த்தேன். பூரித்தேன்.

**சீதா, திருவான்மியூர்**

முன்னேற்பாடாய் டிக்கெட் வாங்கியிருந்த பஸ்ஸைக் கோட்டை விட்டுவிட்டு



செங்கோட்டையிலிருந்து திருநெல்வேலி போக வேறு பஸ் பிடித்தோம். அனலுடன் வெய்யில். யதேச்சையாய்க் குற்றாலத்தில் பஸ் பிரேக் டவுன்! சரி செய்ய இரண்டு மணி நேரம் ஆகும் என்றதும் ஓடினோம், அருவியில் குளிக்க. எதிர்பாராத குளுமை பஸ்ஸைத் தவற விட்ட எரிச்சலைத் தணித்தது.

**கு. வைலட்மேரி, திருப்பத்தூர்-1**

எங்கள் காலனி அப்போது தான் ஸ்தாபகமாகியிருந்தது. வெய்யிலைப் பார்க்காமல் சில கல்லூரி மாணவர்கள் சாலை அமைக்கும் பணியில் இறங்கினர். என் மனம் குளிர்ந்து விட்டது. அவர்களுக்கு எலுமிச்சம்பழஜூஸ் செய்து கொடுத்து அவர்களையும் குளிர்வித்தேன்.

**திருமதி எம். தூசை, சென்னை-86**

இந்தக் கோடையில் கம்ப்யூட்டர் ஸயன்ஸ் வகுப்பில் சேர்ந்ததால் குளுகுளு ரூமில் பொழுது கழிந்தது. ஆறு வாரங்கள் போனதே தெரியவில்லை.

**ஸீதாலக்ஷ்மி, புதுகோட்டை-1**

1982-83ல் கடுமையான தண்ணீர்ப் பஞ்சம் வந்தபோது மக்கள் பட்டபாட்டைக் காணச் சகியாமல் வானத்தை வசைபாடி







ஒரு கவிதை எழுதி வைத்தேன். அதுவரை மழையின் கவடே இல்லாதிருந்து அன்று மாலையே வானம் பொழிந்தது. காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்தது போல் இருந்திருக்கலாம் ஆனாலும் என் மனம் கவி வெறியுடன் மழையில் நனைந்த என் உடலைப் போலவே குளிர்ந்து விட்டது.

எஸ். கல்பனா, ஒடையகுளம்

காளிக்குத் தீச்சட்டி எடுத்தால் மழை பெய்யும் என்று கூறக் கேட்டு, கையில் அனலுடன் பொறுக்க முடியாத சூட்டில் வெறுங்காலுடன் நடந்து மனமுருகி வேண்டியபடியே கோயிலுக்குள் நுழைந்தேன். அன்று திடுமென மழை கொட்டியதை நினைத்தால் இன்னும் சிலிர்த்துப் போகிறது.

விமலா விஜயன், சென்னை-33

போன வருடம் கோடையில் தண்ணீருக்காகத் தெருத் தெருவாய் அலைந்து கொண்டிருந்த போது எங்கள் தெருவில் ஒரு புண்ணியவான் தன் காலி மனையில் கிணறு வெட்டி எல்லோரும் அதிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொள்ள வசதி செய்து கொடுத்தார். அந்த மனிதாபிமானம் பல நூறு மனங்களைக் குளிர்வித்தது.

கே. ராஜகோபாலன், சென்னை-92

திருமணமானதும் தேன் நிலவுக்குக் கொடைக்கானல் போக ஆசை எனக்கு. ஆனால் என் மனைவி மிகுந்த பொறுப்புடன் 'நமக்கு இப்போதுள்ள நிலையில் இந்த ஆடம்பர சம்பிரதாயங்கள் எல்லாம் கட்டுப்படியாகாது' என்று எடுத்துச் சொல்லி நாங்கள் இருந்த இடத்திலிருந்தே கொடைக்கானலை அனுபவிக்கச் செய்தாள்.

டி. எஸ். உஷாதேவி, கடலூர் துறைமுகம்

சென்ற மே மாதம் பூந்தமல்லியில் பொழுது போகாமல் திண்டாடிக் கொண்டிருந்தேன். அருகில் இருந்த நூலகத்தில் நுழைந்த போது கல்கியின் 'பொன்னியின் செல்வனின்' ஐந்து பாகங்களையும் ஒருசேரக் கண்டு ஆனந்தப்பட்டேன். நான்காவது முறையாக பொன்னியின் செல்வனைப் படித்து முடித்த அந்த மூன்றரை நாட்கள் மறக்க முடியாதவை.

தாமல் கண்ணன், சென்னை-54

நல்ல கோட்டை. வள்ளிமலையிலிருந்து திரும்பும்போது திடீர் பஸ் ஸ்ட்ரைக். அந்தி ராவிலிருந்து வந்த ஒரு லாரியில் ஏறிக் கொண்டு பிரயாணம் செய்தோம். என் மனைவிக்கும் எனக்கும் ஒரே தாகம். லாரியில் ஏற்றியிருந்த சாக்கு — அருமையான மாம்பழம். தாகம் சீக்கிரமே தணிந்து விட்டது.







**சாரதா கிருஷ்ணமூர்த்தி, பெங்களூர்-17**

எட்டு வயதாகியும் பேச்சு வராத என் அக்கா மகளை எல்லா டாக்டர்களும் கைவிட்டிருந்தனர். இந்த வருடம் மே மாதம் பலத்த இடியுடன் பெய்த மழையில் ஒரு மணி நேரம் நனைந்த அதிர்ச்சியில் பேச ஆரம்பித்துவிட்டாள் குழந்தை. இதை விட, குளிர்ச்சியான விஷயம் வேறென்ன இருக்க முடியும்?

**ஏ. வி. கே. ரங்கன், புனே-32**

அந்தக் கிராமத்துச் சாலையில் நாவறண்டு போய் பஸ்ஸுக்குக் காத்திருந்த போது அவ்வழியே சென்ற தயிர் விற்கும் கிழவி தன்னிடம் மீதமிருந்த அரை டம்ளர் நீர் மோரை நான் கேளாமலே கொடுத்த சம்பவம் இப்போது நினைத்தாலும் குளிர்ச்சி யூட்டுகிறது.

**ஜே. ஆன்ராஜ், குளித்தலை**

மாதக் கடைசி. உச்சி வெய்யில். சர்பத் வாங்க பர்சைத் திறந்தால் ஒரு ரூபாய் மட்டுமே இருந்தது. ஆபத்பாந்தவனாய் வந்த துபாய் நண்பன் பனீர் கிரெஷ்ஷோடு சிற்றுண்டியும் வாங்கித் தந்து, செருப்பில் லாத என் கால்களுக்குச் செருப்பு வாங்கித் தந்து, ஒரு பேனாவையும் பரிசாகக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

**சரஸ்வதி சேதுராமன், புதுதில்லி-1**

கொதிக்கும் வெய்யிலில் ரேஷன் கடையி லிருந்து உள்ளே நுழைந்தேன். என் கடைக் குட்டி கணேஷ் "பாவம் அம்மா!" என்றபடியே ஒரு டம்ளர் பானைத் தண்ணீரைக் கொடுத்து ஒரு அட்டையால் விசிறினான். ஏ. ஸி. ரூமில் பாதாம்கீர் குடித்திருந்தாலும் அந்தக் குளுமை இருந்திராது.

**எஸ். தனலட்சுமி, பெங்களூர்-41**

கோடை விடுமுறையில் மாங்காடு கோயி லுக்குப் போன போது பஸ் டிரைவர் ஒரு பர்லாங் முன்னதாகவே பஸ்ஸை நிறுத்தி, செருப்பை பஸ்ஸில் கழற்றி வைத்துவிட்டு நடக்கச் சொன்னார். நெருப்பில் தவம் செய்யும் அம்மனைக் காண கால் கொப்ப ளிக்க நடந்த போது ஒரு தண்ணீர் பீப்பாய் வண்டி குடை சாய்ந்து, சாலையெல்லாம் தண்ணீர் ஓடி, எங்கள் கஷ்டத்தைத் தணித்தது. காமாட்சியின் கருணை அது.

**ஜெயா தியாகராஜன், திருச்சி-14**

குழந்தைகளை விட்டுவிட்டுப் பத்து நாட்கள் டெல்லி போக வேண்டியிருந்து. இந்தக் கோடையில் வீடு திரும்பியதும் ஆறு வயது மகனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு நான் வாங்கி வந்த சாமான்களில் எது அவனுக்கு வேண்டும் என்று கேட்டேன். அவன் 'நீதான் வேண்டும் அம்மா' என் றுவே பார்க்கலாம். களைப்பும், வெய்யிலும் இருந்த இடம் தெரியவில்லை.

**ராகமாலிகா அளிக்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் வாசகர்:**

> **திருமதி எஸ். தனலட்சுமி**
> **1564, 39-வது கிராஸ்,**
> **18-வது மெயின், 4-வது T பிளாக்,**
> **ஜெயநகர், பெங்களூர்-560 041.**

---

# கல்கி

**அடுத்த வாரம்:**



## வெள்ளி விழாக் காணும் இருவர்



—உரையாடல்

# டெபாசிட்தாரர்களுக்கு

# 24%

## வட்டி வழங்கப்படுகிறது

**மேற்படி கூடுதல் வட்டி**

**பென்ஷனர், மகளிர், மைனர்களுக்கு மட்டும்**

**''வெள்ளிக் குத்துவிளக்கு'' அன்பளிப்புடன் வழங்கப்படும்.**

கீழ்க்கண்ட வட்டி விகிதங்களில்
டெபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

**(A LEADING HIRE PURCHASE FINANCIERS)**

| | | |
|---|---|---|
| சென்னை | : | 39, நடேச ஐயர் தெரு (2வது மாடி)<br>(சிவா-விஷ்ணு கோயில் அருகில்)<br>உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017<br>போன் : 447186 442218 |
| பெங்களூர் | : | 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)<br>மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் : 366971 |
| திருச்சி | : | 22 மதுரை ரோடு (முதல் மாடி)<br>திருச்சிராப்பள்ளி-620 008 |
| பாண்டிச்சேரி | : | 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்)<br>பாண்டிச்சேரி-605 001 |
| தஞ்சாவூர் | : | எண் : 2 & 3, முதல் மாடி, ஜி. ஏ. கனல் ரோடு,<br>தஞ்சாவூர்-613 001 போன் : 1626 |
| திருவண்ணாமலை | : | 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601<br>போன் : 483 |
| பட்டுக்கோட்டை | : | 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 001<br>போன் : 453 |

CHARI

## அத்தியாயம் 18

நீண்ட நாட்களாக ஆட்சியில் இருந்து விட்ட காங்கிரஸை வீட்டுக்கு அனுப்ப வேண்டும் என்பதில் இயக்கமும், இயக்கக் கூட்டணியும், அந்தக் கூட்டணியின் மூத்த தலைவராகிய மூதறிஞரும் தீவிரமாயிருந் தார்கள். தமிழகத்தின் பல பகுதிகளில் இந்தியை எதிர்த்தும், இயக்கத்தை ஆதரித் தும் உடலில் மண்ணெண்ணெயை அல்லது பெட்ரோலை ஊற்றிக் கொண்டு தீக்குளித் திருந்தார்கள். போலீஸ் துப்பாக்கிச் சூட்டில் பலர் இறந்திருந்தார்கள். இவை எல்லாம் சேர்ந்து அநுதாபத்தை இவர்கள் பக்கம் சர்த்திருந்தன. இருமலை தனது தேர்தல் தொகுதியாகிய எழில்இருப்பிலேயே வந்து தங்கி வேலை செய்தான். முன்பு ஒரு தேர்த லில் மேல்தட்டு மக்களை சர்ப்பதற்கு 'வித்தகர் வேணு கோபாலனூர் பாராட்டு விழா' — என்று நடத்தியது போல் இப் போது நடத்தியாக வேண்டிய அவசிய மில்லை. மேல்தட்டு மக்களின் கூட்டம் மூதறி ஞரின் கூட்டணி காரணமாகவே அவனை முழுமனத்துடன் ஆதரித்தது. ஒப்புக்கொண் டது. ஏற்றுக் கொண்டு விட்டது.

தேர்தலுக்கு ஒன்றரை மாத காலத்துக்கு முன்பே அவன் தன் ஆட்களுடன் எழில் இருப்பில் முகாம் போட்டுவிட்டான். வெட்டுக் காயத்தோடு இளம் நடிகையையும் அருகே வைத்துக் கொண்டு, ''மொழிப் போரில் விழுப்புண் பெற்ற வீரர் —அழிப்

# மூலக் கனல்

நா. பார்த்தசாரதி



போரை எதிர்த்தழிக்கும் ஆற்றல் மறவர்''— என்ற பிரகாரம் அடங்கிய பெரிய படத்துடன் கூடிய சுவரொட்டியை அவன் ஒட்டியதால் அவனுடைய மைத்துனன் அதாவது மூத்த மனைவி சண்பகத்தின் தம்பி தேர்தலில் — அவனை எதிர்த்து ஜமீன்தாருக்காக வேலை செய்தான். கீழ்த்தரமான பிரசாரங்களில் பரம்பரைப் பெரிய மனிதனான ஜமீன்தாருக்கு விருப்பமில்லை. என்றாலும் திருமலை சார்ந்திருக்க கூட்டணி ஜமீன் குடும்பத்தைப் பற்றித் தாறுமாறாக மேடைகளில் பேசியதால் காங்கிரஸ் சார்புள்ள ஊழியர்கள் மட்டத்தில் எதிர்த்தரப்பிலிருந்தும், திருமலையைக் கிண்டல் செய்து சில மட்டரகமான சுவரொட்டிகள் ஒட்டப்பட்டன. ''ஊருக்கு ஒரு பெண்டாட்டி, பேருக்கு ஒரு கட்சி'' — என்ற பாணியில் அந்தச் சுவரொட்டிகள் அச்சிடப்பட்டிருந்தன. ஆனால் அப்போது புயலாக வீசிக் கொண்டிருந்த காங்கிரஸ் எதிர்ப்பு அலையில் இந்த மாதிரிப் பிரசாரம் எல்லாம் எடுபடவில்லை. ஜமீன்தார் தனிப்பட்ட முறையில் ஒழுக்கமானவர், தெய்வ பக்தி நிறைந்தவர், பரம்பரைப் பெரிய மனிதன் என்பதெல்லாம் கூடப் பெரிதாகவோ பிளஸ் பாயிண்டாகவோ யாருக்கும் படவில்லை. திருமலை ஒழுக்கமற்றவன். தெய்வ நிந்தனை செய்கிறவன், புகழ்மிக்க பாரம்பரிய மற்றவன் என்பதெல்லாம் கூடப் பெரிய ஆட்சேபணைகளாகவோ, மைனஸ் பாயிண்டுகளாகவோ யாருக்கும் படவில்லை. அகவிலைகள் கண்டபடி ஏறியிருந்தன. ரேஷனில் சரியாக அரிசி கிடைக்கவில்லை. ஆட்சி மெத்தனமாயிருந்தது. மக்களைப் பற்றித் தப்புக் கணக்குப் போட்டிருந்தது.

'இதே தேரடியில் புழுதியோடு புழுதியாகப் புரண்டு அணு அணுவாகப் போராடி வளர்ந்தவன் நான். உடல் வலிக்க வலிக்க உழைத்து முன்னேறியவன். ஏழை, எளியவர்களாகிய உங்களில் ஒருவன். எனக்கு ஒரு முறை உங்களுக்குத் தொண்டு செய்ய வாய்ப்பளியுங்கள். கடமை, கண்ணியம், சட்டுப்பாடு என்று முழங்கும் என் இதய தெய்வமாம் அண்ணாவின் பேரிலும், தவமுனிவருக்கு ஈடான மூதறிஞரின் பேரிலும் ஆணையிட்டு உங்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன்'' — என்பது போல் பேசிப் பேசி மக்களைக் கவர்ந்தான் திருமலை. காற்று மிகவும் அவனுக்குச் சாதகமான நிலையில் வீசிக் கொண்டிருந்தது. வெற்றி பெற்று விட முடியும் என்ற அபார நம்பிக்கை இதுவரை எந்த நாளிலும் ஏற்பட்டிராத அளவு ஏற்பட்டிருந்தது. தேர்தலுக்கு இன்னும் மூன்று நாட்களே இருக்கிறது என்ற நிலையில்' சென்னையிலிருந்து அவனுக்கு ஒரு டிரங்க்—கால் வந்தது. பங்களாவில் அவன் வேலைக்கு



வைத்திருந்த நம்பிக்கையான ஆள் தான் பேசினன். நகை நட்டுக்கள், ரொக்கம் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு ஆந்திர ஜமீன்தார் ஒருவனுடன் அவள் விஜயவாடாவுக்கு ஓடிவிட்டாள்' — என்ற தகவல் தெரிந்தது. இருமலைக்கு அப்போது அவள் தன்னை விட்டு ஓடினதை விட அந்தச் செய்தி பத்திரிகைகளில் வராமலிருந்தாலே தேர்தல் பிழைக்கும் என்று தோன்றியது. இந்தி எதிர்ப்புப் போரில் வெட்டுக் காயத்துடன் எடுத்த புகைப்படத்தில் அழகி யான அவள் அருகேயிருந்து கண்ணீர் உகுப்பது போல் கவரொட்டிகளை ஆயிரக் கணக்கில் அச்சிட்டு ஒட்டியிருந்தான் அவன். இந்த நேரத்தில் அவள் அவனை விட்டு ஓடி விட்டாள் என்ற செய்தி பத்திரிகைகளில் வந்தால் பெரிதும் பாதிக்கும் என்று அவனுக்குத் தோன்றியது. தேர்தல் முடிகிற வரை எதுவும் பத்திரிகைகளுக்குத் தெரிய வேண்டாம் என்று எல்லாத் தரப்பிலும் எச்சரித்து வைத்தான். ஒன்றரை மாதத்துக்கு மேல் அவன் ஊரில் இல்லாததைப் பயன்படுத்திக் தன் பெயரிலிருந்த அந்த பங்களாவைக் கூட யாருக்கோ விற்று முடித்திருந்தாள் அவள். இது இருமலைக்குத் தெரிந்த போது ஆத்திரம் ஆத்திரமாக வந்தாலும் தேர்தல் முடிவுகள் வெளிவருகிற வரை இந்த விவகாரத்தைப் பெரிதுபடுத்துவதில்லை என்ற பிடிவாதத்தோடு மௌனமாக இருந்தான் அவன். எவ்வளவோ பக்காவாகப் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்திருந்தும் தப்பிவிட்டாள் என்பது எரிச்சலூட்டியது. ஒரு தங்கச் சுரங்கம் யாருக்கும் தெரியாமலே அடைபட்டுப் போனது போல் ஏமாற்றமாயிருந்தது. ஆனால் ஒன்றும் பெரிதாகக் குடி முழுகிப் போய் விட்டதாக அவன் ஒடுங்கி ஒய்ந்து உட்கார்ந்து விடவில்லை. இன்னொரு தங்கச் சுரங்கத்தைத் தேடிக்கொள்ளலாம் என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது தான் காரணம். அடிக்கடி அண்ணன், ''தட்டினால் தங்கம், வெட்டினால் வெள்ளி, தோண்டினால் தோரியம், செதுக்கினால்செம்பொன், அகழ்ந்தால் அலுமினியம், சுரண்டினால் துத்தநாகம்'' — என்று அழகுற மேடையில் அடுக்கும் சொல் நயத்தை நினைவுகூர்ந்தான் அவன். மற்றொரு தங்கக்கட்டியைத் தட்டி எடுக்க முடியும் என்றும் நம்பினன். தான் தொட்டதை எல்லாம் தங்கமாக்கி விட முடியும் என்ற நம்பிக்கை கைநழுவிப் போன தங்கக் கட்டியைப் பற்றி அதிகக் கவலைப்படாமல் இருக்கச் செய்தது. அவனுள் இருந்த தன்னம்பிக்கையைச் சிறிது தடித்தனமான தன்னம்பிக்கை என்று கூடச் சொல்லலாம். முந்திய தேர்தலில் கிடைத்ததை விடத் தாங்கள் பல மடங்கு அதிகமான அளவு வெற்றியைப் பெறமுடியும் என்று அவர்களுக்கே தோன்ற ஆரம்பித்திருந்தது. ஐயாவும், பழைய தோழர்களும் காங்கிரஸ் கூட்டணியையே ஆதரித்துப் பிரசாரத்துக்கு வந்தும் அவன் கவலைப்படவில்லை. ஐயா பல இடங்களில் அவனைத் தாக்கிப் பேசியும் அவன் தனது கூட்டங்களில் ஐயாவைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே இல்லை. நாத்திகனும், பகுத்தறிவு வாதியுமான தன்னை எதிர்த்து ஆத்திகரும் பணக்காரருமான ஜமீன்தாரை ஆதரித்து ஐயா பிரச்சாரம் செய்தது வேடிக்கையாகத் தோன்றியது அவனுக்கு. ஒருவகையில் தன்னை எதிர்த்துப் பேசுவதன் மூலமே ஐயா தனக்கு உதவி செய்கிறார் என்றுகூட அவனுக்குத் தோன்றியது. ஐயாவின் சொற்பொழிவைக் கேட்ட பிறகு அவர் ஆதரிக்கும் கட்சிக்கு நிச்சயமாக ஓட்டுப் போடக் கூடாதென்று முடிவு செய்வார்கள் சில பிரிவினர், அது தனக்கு மறைமுகமான பேருதவி என்று அவன் எண்ணினன். காங்கிரஸை ஆதரித்து ஐயாவும், கண்ணீர்த் துளியை ஆதரித்து மூதறிஞரும் பேசிய விநோதம் தெருவுக்குத் தெரு பேட்டைக்குப் பேட்டை நிகழ்ந்தது. இரண்டு முதியவர்களுமே முன்பு தாங்கள் சார்ந்திருந்த அல்லது தங்களைச் சார்ந்திருந்த இயக்கங்களை இன்று தேர்தல் கூட்டணிகள் மூலம் அழித்து ஒழித்துவிட முயன்றார்கள். ஐயாவோ காங்கிரஸை ஆதரித்தே தீர்த்துக் கட்டிவிடுவார் போலிருந்தது. மரபுகளில் நம்பிக்கையும், பயபக்தியும் உள்ள சில தொகுதிகளில் நின்ற காங்கிரஸ் வேட்பாளர்கள் தங்களை ஆதரித்து ஐயா பேச வராமல் இருந்தாலே பெரிய உதவி என்று கூட அந்தரங்கமாக எண்ண ஆரம்பித்திருந்தார்கள். 'படுத்துக் கொண்டே ஜெயிப்பேன்' — என்று காங்கிரஸ் தலைமை பேசிய பேச்சுக்கு ஒரு பாடம் கற்பித்தாக வேண்டுமென்று மூதறிஞரும் தம்பிகளின் அண்ணனுகிய பேராசிரியரும் விரும்பி முனைந்து வேலை செய்தார்கள். மூதறிஞரும், அண்ணனும் பல மேடைகளில் ஒன்றாகத் தோன்றிப் பெருங்கூட்டத்தை ஈர்த்தனர். 'பர்மிட் கோட்டா லைசென்ஸ் ராஜ்யம்' என்று காங்கிரஸ் இயக்கத்துக்குப் பட்டப் பெயரே சூட்டியிருந்தார் மூதறிஞர்.

பொதுத் தேர்தல் நடந்தது. வாக்குகள் எண்ணப்பட்டன. முடிவுகள் வெளி வர ஆரம்பித்ததுமே இருமலை உற்சாகத்தில் துள்ளிக் குதித்தான். முதல் நிலவரமே அவர்களுக்குச் சாதகமாக இருந்தது. ஒவ்வொரு முடிவும் அவர்களுக்கு வியப்பாகவும் காங்கிரஸுக்கு அதிர்ச்சியாகவும் பேரிடியாகவும் அமைந்தது. இரண்டு மூன்று தலைமுறைகளாக எதிரிலிருப்பில் தொடர்ந்து வெற்றி பெற்று வந்த ஜமீன்தார் பதினையாயிரம் ஓட்டுவித்தியாசத்தில் இருமலையிடம் தோல்வியடைந்தார். தோல்வியை ஒப்புக் கொண்டு அவரே பெருந்தன்மையாக அவனுக்கு வாழ்த்துக் கூறிக் கை குலுக்கிவிட்டுப் போனார். இயக்கத் தோழர்கள் அவனை ரோஜாப்பூ மாலைகளால் மூழ்கச் செய்து விட்டனர். தோளில் அலாக்காகத் தூக்கி ஊர்வலம் விட்டனர்.

முந்திய ஆட்சியை நடத்திக் கொண்டிருந்த கட்சியின் பெரும் தலைகள் மடமடவென்று சாய்ந்தன. 'ஐயோ இத்தனை பெரிய வெற்றியா!' — என்று இவர்களே ஏற்றுக் கொண்டு மகிழப் பயப்படும் வெற்றியாயிருந்தது அது. மகிழ்ச்சியை விடப்பயப்படும் தன்மையும் திகைப்புமே அதிகமாயிருந்தன. ஆட்சி அமைக்கப் போதுமான அறுதிப் பெரும்பான்மை அவர்களுக்குக்

## "கையாள முடியாத சூட்டில் நான் எதையும் தயாரிக்க விரும்ப மாட்டேன். இல்லத்தின் ஆனந்தத்திற்கு என் பக்குவமுறைகளில் ஓரியண்டல் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பும் அடங்கியிருக்கிறது."



### திருமதி ஆஷா படேல்
### சமையல் கலை வல்லுனர்
### மற்றும் பாதுகாப்பு நிபுணர்.

திருமதி படேலுக்கு சுவையான பண்டங்களை சமைக்கப் பிடிக்கும். ஆனால் பிரச்சினைகளைப் பிடிக்காது. சமையலறை ஒரு ஆபத்தான இடமாக இருக்கக்கூடும் என்பது அவருக்குத் தெரியும். தீ, ஷார்ட் சர்க்கியூட்—இன்னும் என்ன நேருமோ, எப்பொழுது நேருமோ யார் அறிவார்?

சென்ற ஆண்டு அவர் இந்த பிரச்சினையை எப்படித் தீர்த்தார் தெரியுமா? அவர் ஓரியண்டல் இன்ஷ்யூரன்ஸிடமிருந்து ஹவுஸ் ஹோல்டர்ஸ் பாலிஸியை எடுத்துக் கொண்டார். குறைந்த பிரீமியம் தொகைக்கு, அவருக்கு தீ, கலகம், காஸ் சிலிண்டர் வெடித்தல்—மற்றும் வெள்ளம், புயல் போன்ற விபத்துக்களிலிருந்து நேரக்கூடிய எதிர்பாராத சேதங்களிலிருந்தும் பாதுகாப்பு கிடைத்தது.

கூடுதல் பிரீமியம் எதுவுமின்றி அவருக்கு இந்த பாலிஸி சொந்த விபத்துக்களிலிருந்து (ரூ.10,000 வரை) பயணத்தின் போது சாமான்கள் இழப்பிற்கும் (ரூ. 1000 வரை) மேலும் பொது மக்களுக்கான சட்டப் பொறுப்புக்களுக்கும் (ஆண்டு ஒன்றுக்கு ரூ. 20,000 வரை) பாதுகாப்பு கொடுக்கிறது.

இவ்வளவு குறைந்த பிரீமியத்தில் இதைவிட சிறப்பான பெறுமானம் வேறு எது கொடுக்கும். பாதுகாப்பு பற்றி நிபுணர் திருமதி படேல் கூறும் ஆலோசனையைக் கேளுங்கள். மேலும் விவரமறிய உங்கள் ஊருக்கு அருகாமையில் இருக்கும் ஓரியண்டல் இன்ஷ்யூரன்ஸின் அலுவலகத்துடன் தொடர்பு கொள்ளுங்கள் அல்லது கீழ்கண்ட முகவரிக்கு கடிதம் எழுதுங்கள்.

எச்.பி.பி. தபால் பெட்டி நெ. 7037, புது தில்லி-110002.

### பயம் இன்றி வாழுங்கள்

**ஹவுஸ்ஹோல்டர்ஸ் பேக்கேஜ் பாலிஸி**

| மதிப்பிடப் பட்ட பெறுமானம் | நடப்பு ஆண்டு பிரீமியம் |
|---|---|
| ரூ. 20,000/- | ரூ. 60/- |
| ரூ. 30,000/- | ரூ. 90/- |
| ரூ. 50,000/- | ரூ. 150/- |
| ரூ. 60,000/- | ரூ. 180/- |
| ரூ. 75,000/- | ரூ. 225/- |
| ரூ. 1,00,000/- | ரூ. 300/- |



**தி ஓரியண்டல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

(ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியாவின் துணை நிறுவனம்)

SIMOES-D/OIC/102/84/TAM



## தி டெவில்

இளைஞர்கள் சிலர் சேர்ந்து தி டெவில் என்ற திகில் நாடகத்தைச் சென்னையில் அண்மையில் அரங்கேற்றினார்கள். சாத்தான், கொலைகள் எல்லாம் உண்டு. சரிதான், ஆனால் புதுமை என்று சொல்லும்படி...?

ஒரு வார்த்தை கூட யாரும் பேசவில்லை; மௌன நாடகம் என்பதே புதுமை!

''வயிறு குலுங்கச் சிரிக்க வைத்த 'சைலண்ட் மூவி' என்ற மௌனத் திரைப்படம் பார்த்ததில் இப்படி ஒரு நாடகம் அரங்கேற்ற வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது. நிறைவேற்றி விட்டேன்'' என்கிறார் நாடகத்தை இயக்கிய திரு. ஹரி.

-ரிக்கி

கிடைத்து விட்டது. முன்னைவிட அதிகமான இடங்களையே அவர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் ஆட்சியே கிடைத்துவிட்டது! பசிக்கு ஏதாவது 'உண்ணக் கிடைத்தால் போது மென்று கையேந்தியவனுக்கு 'உள்ளே வா, விருந்து படைக்கிறேன்' என்று தலைவாழை இலை போட்டு வடை, பாயசத்துடன் விருந்து படைத்திருந்தார்கள் தமிழக மக்கள். வெற்றி திகைப்பையும், சந்தோஷ அதிர்ச்சிகளையும் தாங்கிக் கொண்டு எழுந்து செயல்படவே சில நாட்கள் ஆயின அவர்களுக்கு.

மக்களுக்கும், தங்களுக்கும் நம்பிக்கை ஏற்பட மூத்த தலைவர்கள் ஒவ்வொருவராகப் போய்ப் பார்த்து ஆசி பெறத் தொடங்கினார்கள். தாங்கள் பயின்று வளர்ந்து ஆளான ஈரோட்டுத் தத்துவத்தின் தந்தையான ஐயாவைப் பார்த்து வணங்கி ஆசி பெற்றனர். அவரும் பெருந்தன்மையாக அவர்களை வரவேற்று வாழ்த்தினார். மூதறிஞர், பெருந்தலைவர், என்று கட்சி பேதம், கொள்கைபேதம் பாராமல் ஒவ்வொரு தலைவரையும் சந்தித்து ஆசி கோரினார்கள் அவர்கள். இவர்கள் இயக்கத்தைச் சேர்ந்த சாதாரண மாணவன் ஒருவனிடம் தோற்றிருக்க நிலையிலும், பெரும் தியாகியும் மக்கள் தலைவருமான காமராஜ் அவர்கள், ''மக்கள் தீர்ப்பு... மதிக்கிறேன்'' — என்று மிகவும் கண்ணியமாகத் தோல்வியை ஒப்புக் கொண்டார், வாழ்த்தினார்.

இயக்கத்தைச் சேர்ந்த புதிய சட்டமன்ற உறுப்பினர்கள் கூடினார்கள். அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கும் வேலையைக் கவனமாகச் செய்ய வேண்டியிருந்தது. அண்ணன் உட்பட அவர்கள் அனைவருக்கும் ஆட்சியநுபவம் புதியது. இதுவரை புரிந்திராதது. எதிர்க்கட்சியாக இருக்கிற வரை ஓர் அரசியல் கட்சி அநுபவிக்கிற அசாத்தியத் துணிச்சலையும், விமர்சனம் செய்யும் உரிமைகளையும் அது ஆட்சிக்கு வந்த மறுகணமே இழந்து விடுகிறது. திருமலை வகையறாவும் அப்போது அந்த நிலைமையில் தான் இருந்தார்கள். ஆனால் அண்ணனின் சாதுரியமும் நிதானமும் அவர்களுக்குப் பெருதவியாயிருந்தன. ஆட்சியை அமைக்கும் அந்த நேரத்தில் அண்ணன் மிகப் பொறுமையாகவும், நிதானமாகவும் நடந்து கொண்டார். அமைச்சர் பதவிக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பெயர்களில் திருமலையின் பெயரும் இடம் பெற்றிருந்தது. இதற்கு முந்தைய அமைச்சர்களைப் போல் கடவுளின் மேல் ஆணையிட்டுப் பதவிப் பிரமாணம் செய்து கொள்ளாமல் தமிழ்த் தாயின் மேல் ஆணையிட்டு, மனச்சாட்சியின் பெயரால் பதவிப் பிரமாணம் செய்து கொண்டார்கள் இவர்கள்.

இதற்குள்ளேயே ''நாளையிலிருந்து தமிழகத்தில் ஒரு ரூபாய்க்கு மூன்றுபடி அரிசி தெருத் தெருவாகக் குவித்து விற்கப்படும். தமிழக வீதிகளில் பாலும், தேனும் பெருக்கெடுத்து ஓடப் போகிறது. மூன்றுபடி லட்சியம் என்றார்கள். முடியா விட்டால் ஒரு படி நிச்சயம்! முந்துங்கள்! முந்துங்கள் காணத் தவறாதீர்கள். கதை — பேரறிஞர் பெருந்தகை — வசனம், பாடல்கள் சீர்திருத்தச் சிங்கம் திருமலைராசன்'' — என்று தோற்ற கட்சியினர் கிண்டலாக மேடைகளில் பேசவும், சுவர்களில் எழுதவும் ஆரம்பித்திருந்தனர். பொருளாதாரப் பிரக்ஞையில்லாத அரசியல்வாக்குறுதிகளும், உணர்ச்சிகரமானதேர்தல் உறுதிமொழிகளும் பின்னால் எவ்வளவு வம்பை உண்டாக்கும் என்பது அண்ணனுக்கே இப்போது தான் புரிந்தது. ''இந்த வாக்குறுதியை நிறைவேற்றாவிடில் முச்சந்தியில் நிறுத்திச் சவுக்கால் அடியுங்கள்'' — என்று மேடையில் முழங்கப் போக இன்று சுவர்களில் ''முச்சந்தி இங்கே! சவுக்கும் இங்கே! மூன்றுபடி எங்கே?'' — என்று எழுத ஆரம்பித்திருந்தார்கள். எழிலிருப்பு டி. பி. யில் முன்பு தனக்கு மறுக்கப்பட்ட அதே ஏ. சி. அறையில் திருமலை இன்று அமைச்சர் அந்தஸ்துடன் தனக்கு வேண்டிய பழகிய ஒரு பெண்ணுடன் தங்கப் போக இப்போது அவன் அமைச்சனாகையினால் அது சாத்தியமாகிவிட்டது. எதிர்க் கட்சிப் பத்திரிகைகள் — 'மந்திரியா மதன காமராஜனா?' என்று தலைப்புப் போட்டு எழிலிருப்பு டி. பி. ஏ. சி. அறை அழகி யார் என்ற ஆய்வில் இறங்கின. முதல் முறையாகத் தந்தை முன்பு செய்தது போல் அண்ணனும் இன்று அவனைக் கூப்பிட்டுக் கண்டித்தார். (தொடரும்)

# ஆழ்நிலைத் தியானம்

## TRANSCENDENTAL MEDITATION

ஆழ்நிலைத் தியானம் ஒரு எளிய மனப்பயிற்சியாகும். காலையும் மாலையும் 20 நிமிடங்கள் இத்தியானத்தைப் பயிற்சி செய்வதால் உடலும், மனமும் ஆழ்ந்த ஓய்வை அடைகின்றன. மாணவர்களுக்கு நினைவாற்றல் குறிப்பிடத்தகுந்த அளவு அதிகரிக்கின்றது. இரத்த அழுத்தம், ஆஸ்துமா, தூக்கம் இன்மை, நரம்புத் தளர்ச்சி, சர்க்கரை வியாதி போன்ற நோய்கள் இப்பயிற்சியினால் நீங்கி, உடல்நலம் – மனநலம் அதிகரிக்கின்றது. புகைப்பிடித்தல், தேவையில்லாத மாத்திரைகள் உட்கொள்ளுகின்ற பழக்கம், குடிப்பழக்கம் நீங்குகின்றது. 300-க்கும் மேற்பட்ட டாக்டர்கள் இதன் பயனை உறுதி செய்கின்றனர். நீங்கள் எங்கள் நிறுவனத்திற்கு நேரில் வரும்போது இந்த விஞ்ஞானச் சான்றுகளை பார்க்கலாம்.

ஒன்பது வயதிலிருந்து எல்லா வயதினரும் எம்மதத்தினரும், ஐந்து நாளில் தினசரி ஒரு மணி நேரத்தில் கற்றுக் கொள்ளலாம். பிரதி சனிக்கிழமை மாலை 6-00 மணிக்கு புதிய வகுப்புகள் ஆரம்பம் ஆகின்றன. தபால் வழி கற்க இயலாது. தமிழிலும் ஆங்கிலத்திலும் வகுப்புகள் நடைபெறும்.

இடம் : **மகரிஷி இயற்கை நியதிக் கல்லூரி,**
**(MAHARISHI COLLEGE OF NATURAL LAW)**
மகரிஷி தோட்டம், 28, டாக்டர் குருசாமி சாலை,
(பச்சையப்பன் கல்லூரி அருகில்) சேத்துப்பட்டு, சென்னை-600 031
போன் : 665842

# காது கேட்காத பிரச்னையா?

அறிவியல் ரீதியில் தீர்வு - ஆழ்ந்த மனத்திருப்தி உறுதி.



அணியுங்கள் சக்தி வாய்ந்த
ஆனால் பார்வைக்குத்தெரியாத
பின் காது

## நோவாக்ஸ்

ஹியரிங் எய்டு



ஆம்! அது அடக்கமானது, கனமில்லாதது அளவில் சிறியது உங்களுக்காகவே காதின் பின் புறம் கஷ்டமின்றி எளிதாக பொருத்தும் வகையில் அமைக்கப்பட்டது. துல்லியமாகவும் சீராகவும் கேட்க எலக்ட்ரெட், மைக்ரோபோன் உபயோகிக்கப்படுகிறது.
பாக்கெட், மற்றும் ஸ்பெக்டகிள் வகைகளும் கிடைக்கும்.

தொடர்பு கொள்க.

**சிங் டிரேடிங் கம்பெனி** (மானுபாக்சரிங் டிவிஷன்)
9, பினாக்கர்ஸ் ரோட், சென்னை, 600 002
தொலைபேசி எண் : 844169/844359

## அத்தியாயம் 16

### ஜீவன்முக்தன்

அவசரத்தில் எந்தக் கோலத்தை எவ்வாறு அள்ளித் தெளிப்பது என்று புரியாத இருவரும் திகைத்திருக்கையில்...

கதவு தட்டும் ஓசை காதுகளில் கரடிகையாய் ஒலிக்கிறது.

''என்ன முடிவு பிரபோ?''

தியாகவல்லியின் நாவில் நெருப்புத் துண்டை வைத்தது போன்ற துடிப்பு...

சிந்திக்க நேரமில்லை. வேங்கைமார்பன் சுருங்கச் சொன்னான்: ''கோயிலுக்கு முன்கூட்டியே புறப்பட்டு வந்து பொற்றாமரைக் குளத்துக் கிழக்குக் கரைப்பாதை முனையில் எப்படியாவது அவனைக் கொண்டு வந்து அமர்த்தி வை. மிகுதியை நான் பிறகு பார்த்துக் கொள்கிறேன்.''

வேங்கைமார்பனும் பசுபதியும் தோட்டத்துள் பாய்ந்து இருளில் மறைந்தனர்.

தியாகவல்லி வேகமாக அடுக்களைக்குள் நுழைந்தாள். அவசர அவசரமாகச் சோற்றை வட்டிலில் கொட்டிக் குழம்பையூற்றி, கறிகாய்களை நிரப்பிப் பிசைந்து ஒரு கவளம் உண்டு அசை போட்டவாறு எச்சில் கையுடன் வெளியே வந்தாள்.

உணவு கொள்கிறாளாம்...

கால தாமதத்துக்குக் காரணம் கற்பிக்க வேண்டுமல்லவா?

இடது கையால் தாழ்ப்பாளை நீக்கிக் கதவைத் திறந்தாள்.

திருமேனிப் பிரகாசம் தித்திக்கச் சிரிக்கிறது.

''உணவு நேரத்தில் வந்து விட்டேன். உண்டு முடித்தே கதவைத் திறந்திருக்கலாமே தியாகவல்லி ''

''நன்றாக இருக்கிறது: அதுவரை நீரும் வெளியில் நிற்பதாவது! உள்ளே வாருங்கள் இளவரசி!''

இருவரும் உள்ளே சென்றனர்.

உடன் வந்த வீரர்கள் வெளியே ஓய்வு கொண்டனர்.

''உட்காருங்கள்; கையலம்பிக் கொண்டு வந்து விடுகிறேன்.''

''ஆ(ங்)! ஆ(ங்)! உண்டு முடித்த பிறகே பேசலாம் தியாகவல்லி!''

''முக்கால்வயிறு நிரம்பி விட்டது; கால் வயிற்றைப் பற்றிக் கவலையில்லை, இளவரசி!''

''நீ சொல்வதில் ஏதோ உள்ளர்த்தம் இருக்க வேண்டும்.''

அலம்பிய கைகளைத் துடைத்துக்கொண்டே வந்த தியாகவல்லியின் அதரங்கள் அர்த்தமுள்ள பெண்ணிலக்கணமாய் முறுவலிக்கின்றன.

''நாமிருவருமே முக்கால்வயிற்றுவாசிகள் தானே இளவரசி.''

முக்கால் வயிற்று வாசிகள்...

திருமேனி விழிக்கிறாள்...

தீபங்கள் சிரிக்கின்றன...

தியாகவல்லி விளக்கினாள்:

''திருமணமாகாத எந்தப் பெண்ணும் முக்கால்வயிற்று வாசிகள்தானே இளவரசி.''

கண்களில் நீர் கரைதட்டுகிறது.

ஓ... இலக்கியத்துக்கும் அப்பாற்பட்ட இனிய கருத்து...

திருமேனி சிலிர்க்கிறது.

''சிந்தனைக்குரிய கருத்து தியாகவல்லி. உன்னிடம் சில விஷயங்கள் பேசவேண்டும்.''

''கோயிலுக்குப் போய்ப் பேசலாமே.''

''நடு இரவுக்கு இன்னும் நேரமிருக்கிறதே.''

''அதனாலென்ன இங்கிருந்து போக வேண்டாமா? போய்ப் பொற்றாமரைக்குளத் தண்டையில் அமர்ந்து கொண்டு ஆனந்தமாகப் பேசலாமே!''

'' அதுவும் ஆரோக்கியமாகத்தானிருக்கிறது. புறப்படு.''

தியாகவல்லி எழுந்து கொண்டாள்.

''நீ அலங்காரம் செய்து கொள்ளவில்லையா?''

அவள் சூனியமாய்ச் சிரிக்கிறாள்.

''ஏனிந்த பாலைநிலச் சிரிப்பு தியாகவல்லி?''

''இளவரசி ஒன்று சொல்வேன்; வருத்தப்படமாட்டீர்களே?''

''இனி நீ எதைச் சொன்னாலும் வருத்தப்படமாட்டேன்.''

''புருஷனை இழந்தவள் தான் விதவையென்பதில்லை; புருஷனே கிடைக்காமல்



# வேங்கை வனம்

அல்லது புருஷனே வேண்டாம் என்று ஒதுக்கியவளும் விதவைதான். நமக்கேன் அலங்காரம்?''

யாரோ திருமேனியின் கன்னத்தில் பளார் என்று அறைவது போன்றபிரமை...

அவள் ஒன்றும் பேசவில்லை; பேச முடியவில்லை; பேசுவதற்கும் ஒன்றுமில்லை.

இருவரும் புறப்பட்டனர்.

பல்லக்கு, வீரர்கள் சூழ மீனாட்சியம்மன் ஆலயம் நோக்கி நகர்ந்தது.

இவ்வளவு விரைவாகப் பாண்டிய குமாரி கோவிலுக்கு வருகை தருவாள் என்பது யாரும் எதிர்பாராதது. எனவே செவிமடுத்த அடுத்த கணம் முரசங்கள் முழங்கின; பணிலங்கள் ஆர்த்தன; கொம்புகள் ஊதின; மணியோசை சுநாதமாக எழுந்தது.

எழுந்தவாறே அவை மரியாதை செலுத்தி அடங்கவும் செய்தன.

அபிஷேகத்தின் போது அறிவிக்குமாறு கட்டளை பணித்து விட்டு, தியாகவல்லியை அழைத்துக் கொண்டு பொற்றாமரைக்குளம் நோக்கி நடந்தாள் திருமேனி.

நூபுரங்கள் ஓசை கேட்கும் அமைதி.

உடன் தொடர்ந்த வீரர்களையும் அவசியமில்லை என்பது போல நிறுத்திவிட்டு முந்திக் கொண்டாள் தியாகவல்லி. அமைதியாகப் பேசப் போகிற செய்திகள் அவர்கள் காதுகளில் ஏன் அநாவசியமாக விழவேண்டும் என்று சமாதானம் சொல்லிக்கொண்டாள்.

இருவரும் பொற்றாமரைக் குளத்தை நெருங்குகிறார்கள்.

வழிநெடுகத் தூணுக்குத் தூண் ரகசியக் கண்கள்.

தியாகவல்லியின் சிந்தனை, எங்கெல்லாமோ அலைமோதுகின்றன.

வேங்கைமார்பன் தவறாது ஏற்பாட்டுடன் வந்திருக்க வேண்டுமே! கவனமாக இளவரசியைக் கடத்த ஏற்பாடு செய்திருக்கவேண்டுமே! வாள் முனையில் நடக்கிறமாதிரியான இச்செயல் கொஞ்சம் பிறழ்ந்தாலும் கால்களைக் கீறி விடுமே! கால்களைக் கீறினாலும் பரவாயில்லை; கால்களையே வெட்டி முடமாக்கி விடுமேயானால்...

பொங்கி வந்த பெருமூச்சையடக்கிக் கொள்ளப் பெரிதும் முயல்கிறாள் தியாகவல்லி.

வேங்கைமார்பன் குறிப்பிட்ட அதே இடத்தில் அமர்ந்து பேசத் திருமேனியை அழைத்து அமரச் செய்கிறாள் தியாகவல்லி.

கோவி. மணிசேகரன்



சுற்றும் முற்றும் கவனிக்கிறாள்.

கரிய பெரிய இருட்டு.

நடக்கப் போவதோ பயங்கரத்திலும் பயங்கரம்.

நன்மைக்கோ? தீமைக்கோ?

அன்னையே!... மீனாட்சி...

பொற்றாமரைக் குளத்து மேற்கு கரைப் பாதையில் மட்டும் சற்றே நிலாவெளிச்சம்.

ஆள்நடமாட்டங்கள் தொலைவிலிருக்கும் கருவறை பக்கமாக இருந்தது. கனபாடிகளின் மந்திர கோஷங்கள் மெல்லக்கேட்டுக் கொண்டிருந்தன.

அது கோயில்; என்ன பயம் வேண்டிக் கிடக்கிறது?

''இதற்கு முன் இப்படி ஜாமப்பூஜைக்கு வந்திருக்கிறீர்களா இளவரசி?'' என்று கேட்டான் தியாகவல்லி.

''ஒருமுறை தந்தையாருடன் வந்திருக்கிறேன்.''

''இப்போது நீங்கள் வந்தது மன்னருக்குத் தெரியுமா?''

''தெரியாமலா? பாண்டிய நாட்டுக்காவல் மரம் கூட தந்தை உத்தரவின்றி ஒரு இலையைக் கூட அசைக்க முடியாது. நாம் வழிபாட்டை முடித்துக் கொண்டு நேரே அரண்மனைக்குச் செல்கிறோம். இன்றிரவு நீ என்னுடன் உறக்கம் கொள்கிறாய்!''

ஆகட்டும் என்பது போலத் தலையசைக்கிறான் தியாகவல்லி.

இன்றிரவு எந்த இடத்தில் எவ்வாறு உறக்கம் கொள்ளப் போகிறோம் என்பது தான் அவளுக்கே புரியாத புதிராக இருக்கிறதே!

''தியாகவல்லி! கானப்பேரெயில் கோட்டையை நீ துப்புரவாகச் சுற்றிப் பார்த்து இருக்கிறாயா?''

''ஓரளவு.''

''அவ்வளவு பலம் வாய்ந்த கோட்டை யாமோ?''

''கற்கோட்டை என்று சொல்வதைவிட இரும்புக் கோட்டை என்று சொல்லலாம்!''

''யவனப் பொறிகள்...''

திருமேனி கேட்டுக் கொண்டிருக்கும் போதே அங்கே ஒருவன், குடியானவன் என்றும் சொல்ல முடியாது, பைத்தியக்காரன் என்றும் தீர்மானித்து விடமுடியாது, அப்படி ஒரு கோலத்தில் தாடியும், மீசையும் தலைப்பாகையுமாக வந்து நிற்க, பேச்சு தடைப்பட்டது.

இருவருமே அண்ணாந்து கவனிக்கிறார்கள்.

தியாகவல்லிக்குப் புரிந்து விட்டது.

வேங்கைமார்பன்...!

எவனோ ஒரு சித்து புருஷன் மாதிரி...

திருமேனி சிந்திக்கிறாள்...

யாரிவன்? எதற்காக இவன் நம்மை நோக்கி வர வேண்டும்? அதுவும் இந்த நேரத்தில்?

''திருமேனி! நலமா?''

—வேங்கைமார்பன் குரலைக் கமறலுடன் கூடிய ஓசையில் சொற்களைப் பிரசவிக்கிறான். இதற்காகவே சில வெள்ளரிப் பிஞ்சுகளை விழுங்கி இருந்தான்.

அவனை உற்றுக் கவனிக்கிறாள் திருமேனி. அந்த மின்னல் பார்வை இருட்டிலும் ஓர் இரகசிய ஒலியாகத் தெரியவே, வேங்கைமார்பன் வாசிக்க முடியாமல் திணறுகிறான்.

அந்தப் பார்வைப் பரிசிலனை, தியாகவல்லியைத் திணறடிக்கிறது.

கண்டுபிடித்து விட்டாளோ?

வேங்கைமார்பனுக்கே சற்று வியர்த்துக் கொட்டுகிறது.

திருமேனியின் தோகை இமைகள் படபடத்துச் சாமரம் வீசுகின்றன.

பொற்றாமரைக் குளத்தில் அவ்வப்போது மீன்கள் துள்ளிக் குதிக்கும் ஓசை...

ஏதும் பேசாமல் ஏனிப்படிப் பார்வையில் அம்பு தொடுக்க வேண்டும்?

ஒரு கணமா? இரு கணமா?

சளக்...

பார்வை விடுபட்டு ஓசைவந்த பக்கம் திரும்புகிறது. அப்பாடா...

வேறொன்றுமில்லை. இரவுக் காலத்து மீன் கொத்திப் பறவையொன்று, குளத்தில் தலைகீழாகப் பாய்ந்து உள்ளே சென்ற ஓசை...

சற்றைக்கெல்லாம்...

அதே சளக்...

மீன்கொத்தி வெளியே வந்து பறந்து செல்கிறது. அதன் அலகில் திருமேனியின் கண்களனைய கெண்டை மீன்!

அந்தக் கெண்டையை மீன் கொத்தி கவ்விச் சென்றுவிட்டது. நாம் இந்தக் கெண்டையைக் கொத்திக் கொண்டு பறக்க வேண்டுமே என்று எண்ணிப் பார்க்கிறான் வேங்கைமார்பன். அந்த எண்ணத்தில் மிகுந்த கவிதையழகு அவனைப் புன்முறுவல் பூக்கச் செய்கிறது. அதேநேரத்தில் தன்னைப் புரிந்து கொண்டாளோ என்று நினைக்கிற போது...

எப்படியோ...

அம்பனைய அந்தப் பார்வையை விடுவிக்கச் செய்த மீன்கொத்தியை வாழ்த்திக் கொள்கிறான் தியாகவல்லி.

மேலும் மௌனம் நீடிக்க விடாது முந்திக் கொண்டான் தியாகவல்லி.

''ஐயா, நீங்கள் யார்?''



கொள்ளையனிடம் ஒரு வீட்டுக்காரர் கேட்டார்: ''ஏனப்பா நீ என் மாப்பிள்ளையின் குருவா, சிஷ்யனா, பிரமாதமா அபகரிக்கிறாயே?''
—எஸ். சித்ரா.

# Are you looking for a golden scrip?

## Sakthi Finance offers equity shares



**20%**

**DIVIDEND ASSURED**

**HIGHLIGHTS**

*

EXISTING Hire Purchase Company

*

Growth rate over 500% in three years

*

Unit of Sakthi Group

*

Illustrious board

*

Management with proven abilities



**SAKTHI FINANCE LIMITED**

Regd Office: 475, Dr. Nanjappa Road,
Coimbatore-641 018

ISSUE OPENS
ON 10TH SEPTEMBER 1984

தியாகவல்லியை, வித்தியாசமாகக் கவனித்த வேங்கைமார்பன், ''நான் பேச வந்தது இளவரசியிடம்'' என்றான்.

புரிகிறது; திருமேனியின் வாயைக் கிளறி அதன் மூலம் ஏதோ சாணக்கிய நாடகமாட உத்தேசிக்கிறார் வேங்கைமார்பன்.

''யார் நீ?'' திருமேனியின் நாவசைந்தது.

ஒருமையில் பேசியது வேங்கைக்குப் பொறுமையிழக்கச் செய்தது.

''யார் நீ? நல்ல கேள்வி. தமிழ்ச்சங்கத்து எதிர்காலத் தலைவிக்கு நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. உருவத்தைக்கண்டு எண்ணாமல் மரியாதைக்கு மதிப்பு கொடுத்து இருக்கலாம். ஒரு காலத்தில் நான் சேர நாட்டில் கனிதவல்லானாக இருந்தவன். இப்போது . என்னைப் பித்தன் என்கிறார்கள்; சித்தன் என்கிறார்கள்; ஜீவன்முக்தன் என்கிறார்கள். எனக்கு இளவரசியும் ஒன்றுதான் இதோ இருக்கும் சளவரசியும் ஒன்றுதான்! இங்கே நான் ஜாமத் தலத்துக்கு வந்தவன். நீயும் ஜாமப் பூசைக்கு வந்ததறிந்து வாழ்த்த வந்தேன். ஆனால் எடுத்த எடுப்பில் 'யார் நீ'' என்றாய்? வானத்தில் செல்லும் சுபதேவதையின் 'ததாஸ்து' பெறவந்தவள் மாதிரித் தெரியவில்லையே!''

அரண்டு போனாள் அழகின் தலைவாசலில் பூத்த அபூர்வ மலரான திருமேனி.

'ததாஸ்து' பெற வந்தவள்...

எத்துணைக்குத் தீர்க்கதரிசனமாக இந்த ஜீவன்முக்தர் கூறிவிட்டார்...

விருட்டென்று எழுந்து நின்று பணிகிறாள் திருமேனி...

தியாகவல்லியும் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டே உடன் எழுந்து நிற்கிறாள்.

சந்தேகப்பட்டது போல ஒன்றுமில்லை. வேங்கைமார்பனை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. ஒரு கண்டம் தப்பியது.

''மன்னிக்க வேண்டும் சுவாமி! நான் சிறியவள். தமிழ் ஞானம் வேறு; வயதின் அனுபவம் வேறு என்பதைப் புரிய வைத்து விட்டீர்கள்.''

''இன்னும் புரிய வைக்க வேண்டியவை நிறைய இருக்கின்றன.''

வேங்கைமார்பன் ஞானியைப் போலச் சிரிக்கிறான். உடன் ஒருமுறை இருமுவது போலப் பாசாங்கும் செய்கிறான்.

''திருமேனி! வேங்கைமார்பன் வரம் கேட்க வந்த உனக்கு அது பலிதமாகும். சுபதேவதை என்ன 'ததாஸ்து' கூறுவது? இதோ நானே கூறுகிறேன்: 'ததாஸ்து!' ''

''சுவாமி!''

—மேலும் நடுங்கிப் போனாள் நான்மாடக் கூடலின் தென்மாடப் பேரழகி திருமேனி.

''சுவாமி நீங்களே சொல்லுங்கள். வேங்கைமார்பன் செய்தது நியாயமா?''

''நியாய அநியாயத்துக்கு அப்பாற்பட்ட முக்தன் நான்; அந்த மீனாட்சித் திருமேனியின் பக்தன் நான். நான் ஒரு மந்திரம் சொல்லித் தருவேன். அதர்வ வேதத்தில் ஸ்திரீ கர்மாணி மந்திரம் என்பது. இதனை ஜாம வழிபாட்டில் நீ ஜபிப்பாயேயானால், வேங்கைமார்பனே ஓடிவந்து உன் காலில்



சமீபத்தில் அமெரிக்காவில் ஒரு விநோதமான வாக்கெடுப்பு நடைபெற்றது. அந்த வாக்கெடுப்பு என்னவென்றால் குழந்தைகள் அதிகம் விரும்புவது தன் அம்மாவையா? டெலிவிஷனையா? என்பது தான். போட்டியின் முடிவு என்னவென்று தெரியுமா? குழந்தைகள் அதிகம் விரும்புவது டெலிவிஷனைத்தானாம்! அந்த அளவிற்கு அமெரிக்காவில் டெலிவிஷனுக்கு மவுசு உள்ளது.

நன்றி: மாலைமுரசு.

எழுதியவர்: எம். இராஜேந்திரன்

---

விழுவான். அப்போது நீ அவனை எட்டி உதைத்தும் பழி வாங்கலாம்; கட்டிப் பிடித்தும்...''

''சுவாமி!''

''ஒரு பேச்சுக்குச் சொன்னேன்.''

''அந்த மந்திரத்தை எனக்குச் சொல்லிக் கொடுங்களேன் சுவாமி!''

''அதோ அந்த சுசான மூலை மந்திரத்துக்குரிய ஏற்றதான இடம். வா என்னுடன்; கால் நாழிகைப் போதில் காதில் உபதேசிப்பேன்.''

திருமேனி முன்னே செல்ல, வேங்கைமார்பன் பின்னே சென்றான். அவ்வாறு செல்கிற போது அவன் தியாகவல்லியைத் திரும்பிப் பார்த்துக் கண்களால் சமிக்ஞை செய்யவும் செய்தான்.

அடடா! வேடன் என்றும் விருத்தன் என்றும் வேஷம் போட்ட வேலவன் இவரிடம் என்ன செய்ய முடியும் என்று எண்ணிச் சிரித்துக் கொள்கிறாள் தியாகவல்லி.

திருமேனியும் வேங்கைமார்பனும் அந்த இருட்டான சுசானமூலைப் பகுதிக்குச்செல்ல..

கால்நாழிகைப்போது கணங்களை விழுங்கிக் கொண்டிருக்க...

காரியம் சுச்திரமாக முடிந்துவிட்டது என்பது போலப் டகபதி எட்டிப்பார்க்க...

தியாகவல்லி விரைந்து அவனைப் பின்பற்றி ஓடினாள்.

மீனாட்சியம்மனுக்கு அபிஷேகம் ஆரம்பமாகிறது என்பதனை அறிவிக்க ஆலயமணி ஓசையெழுப்புகிறது...

அது, 'திருமேனி, திருமேனி' என்று அழைப்பது போல ஒலிக்கிறது.

(தொடரும்)


குடும்பக் கட்டுப்பாடு
முகாம்
" ஏண்டி
இப்படி
கூட்டம்?"
" ஆபரேஷன்
பண்ணிக்கிறவங்
களுக்கு இரண்டு
ராகமாலிகா சேலை
பரிசு கொடுக்க
றாங்களாம்"

# காளிதாசன் செய்த திருத்தம்



**வை**ரமுத்துவின் ஒரு பாடலில் பாலசந்தர் ஒரு ''ம்'' சேர்த்ததால் அதன் அர்த்தத்தையே உயரத் தூக்கி விட்டதாக 29.7.84 கல்கியில் பார்த்தவுடன் காளிதாஸன்—பவபூதி கதைத் துணுக்கொன்று நினைவு வந்தது. காளிதாஸனுக்கும் பவபூதிக்கும் ''வித்வத் காய்ச்சல்'' நிலவியதாகக் கூறும் பல கதைகளுக்கு மாறாக இனியதொன்று.

பவபூதி உத்தர காண்டத்தை ''உத்தர ராம சரிதம்'' என்ற உத்தம நாடகமாக உருவாக்கினான். அதுகுறித்துக் காளிதாஸனின் யோசனைகளைக்கேட்டுப் பயனடைய வேண்டுமெனக் கருதினான். காளிதாஸன் ஆசைநாயகியுடன்இருந்த சமயத்தில் தன் நூலுடன் அவனிடம் சென்று வேண்டுகோளைத் தெரிவித்தான். காளிதாஸனும் அன்பு மரியாதையுடன் அப்போதே சுவடியை வாங்கிப் படிக்கலானான். காமினி தாம்பூலம் மடித்துக் கொடுத்துக்கொண்டே இருக்க அதை மென்றவாறு பவபூதியின்காவியரஸச்சாற்றினையும் விழுங்கிக் கொண்டிருந்தான்.

அதில் முதல் அங்கத்தில் ராமபிரான் கோதாவரி தீரத்தில் ஸீதா தேவியுடன் கழித்த இன்ப நாட்களை அவளிடமே நினைவுகூர்ந்து ச்லோகம் சொல்கிறான் ''நாம் அன்பில் இணைந்து ரஹஸ்யம் பேசிக் கொண்டே இருப்போம். இவ்வாறாக நமக்கே தெரியாமல் இரவு ஒவ்வொரு யாமமாய் ஓடி முடிந்து விடும்.''

இவ்விடத்துக்கு வந்ததும் காளிதாஸன் ''சுன்னம் அதிகமாகிவிட்டது'' என்று கூறியவாறு தாம்பூலம் தரும் காமினியைப் பார்த்தான். பவபூதியையும் குறிப்பாகச் சிறிது பார்த்தான்.

'சுண்ணாம்பு அதிகம் தடவிவிட்டதையே சொல்கிறார்' என்று காமினி நினைத்தாள். அறிஞனான பவபூதிக்கு உட்பொருள் புரிந்து விட்டது. ''ஆஹாஹா'' என வியந்து காளிதாஸனை நமஸ்கரித்தான்.

'சூர்ணம்' என்றால் சுண்ணாம்பு. அது பேச்சு வழக்கில் 'சுன்னம்' என்றாகும். 'சூன்யம்' என்ற வார்த்தையும் பேச்சுக் கொச்சையில் 'சுன்னம்' என்றாகும். 'சூன்யம்' என்பதற்குள்ள பல பொருள்களில் ஒன்று, வடமொழியில் 'ம்' என்பதைக் குறிக்கும் வட்டப்புள்ளி.

''சுன்னம் அதிகம்'' என்று காளிதாஸன் கூறியவுடன் மேலே கண்ட ச்லோகத்தில் ஒரு 'ம்' அதிகம் என்று புரிந்து கொண்டு அதை நீக்கிவிட்டான் பவபூதி.

''ராத்ரி: ஏவம் வ்யரம்ஸீத்''—இரவு இவ்வாறு (நம் ரஹஸ்யப் பேச்சில்) முடியும் — என்று அவன் எழுதியிருந்தான். இப்போது காளிதாஸன் பவபூதியிடமுள்ள கௌரவ சித்தத்தால் காமினிக்கும் புரியாதபடி 'ம்'மை எடுக்குமாறு சிலேடையாகத் திருத்திக் கொடுத்ததில் ''ஏவம்'' என்பது ''ஏவ'' என்றாயிற்று.

இதனால் பொருள்தான் எப்படி மாறிவிட்டது? ''இரவு இவ்வாறு முடியும்'' என்பது, இப்போது ''இரவு மட்டுமே முடியும்'' என்றாயிற்று.

''நான் ரஹஸ்யம் பேசிக்கொண்டேயிருக்க ஒவ்வொரு யாமமாக இரவு மட்டுமே முடியும்'' என்றால், ''அப்போதும் நம்முடைய ரஹஸ்ய அளவளாவல் முடியவில்லை'' என்பது அதிநுட்பமாகச் சூசனை செய்யப்படுகிறதல்லவா?

ஒரு ''ம்''மை எடுத்ததன் சிறப்பு பார்த்தீர்களா?

''கன்யா.''

அலசல்

# ஓடி ஓடித் தேடினாலும் ஒருவராவது கிடைப்பாரா?

பல்லாண்டுகளுக்கு முன்பு தமிழில், வெளியான 'வியட்நாம் வீடு' மற்றும் 'படிக்காத மேதை' படங்களின் கதையை இணைத்துச் சற்று மாறுதல் செய்தால் அதுதான் வாழ்க்கை திரைப்படத்தின் மூலக் கதையாகும் என்று மூன்று படங்களைப் பார்த்த எவரும் மறுக்க முடியாது... இந்தக் கதைக்காக வடநாட்டு 'அவதார்' படத்தை நாடி நம்மவர்கள் போயிருக்கிறார்கள் என்பதை உணர்ந்த போது பெரும் அவமான உணர்வு மேலிட்டது.

இதேமாதிரி எப்போதோ இருபது வருஷங்களுக்கு முன்பு வெளியான ஜாங்கோ (DJANGO) படத்தின் மூலக்கதை வருஷத்தில் குறைந்தபட்சம் இரண்டுக்குக் குறையாத தமிழ்ப் படங்களில் இன்னும் கையாளப்படுகிறது.

இதையெல்லாம் காணும் போது தமிழ்ப் படவுலகில் கதைப் பஞ்சமும், அறிவுப் பஞ்சமும் ஏற்பட்டு' விட்டதா என்று எவராலும் சந்தேகப்படாமல் இருக்க முடியாது.

காப்பியடித்த கதைகள், ஆபாச நடனங்கள், குமட்டும் செக்ஸ் காட்சிகள்,



✕ பாபு



✕ எம். சரவணன்

அறிவு ஜீவிகளால் ஜீரணிக்க முடியாத சண்டைக் காட்சிகள், இரட்டை அர்த்த வசனங்கள், பாடல்கள், இப்படியான மசாலாப் படங்கள்... இதென்ன கேவல நிலை... தமிழ்ப்பட உலகம் இந்த அளவுக்கு க்ஷீணித்து விட்டதன் காரணம் என்ன?

திரு. வீ. சுப்பிரமணியம் அறிவுபூர்வமான விமர்சகர்... 40 வயதிற்குள்ளாக சர்வதேச ரீதியில் சுமார் 4000 படங்கள் பார்த்தவர். ஐந்து சர்வதேசப் படவிழாக்களைக் கண்டவர்... சென்னையில் ஃபிலிம் சொஸைட்டி தொடங்கி நடத்தியவர்... இந்திய ஃபெடரேஷன் ஆப் பிலிம் சொஸைட்டியின்



✕ இதைவிட மோசமான ஆபாசக் காட்சிகளும்...

பிராந்திய கௌரவக் காரியதரிசியாக நான்கு ஆண்டுகள் பணியாற்றியவர்... பூனா பிலிம் இன்ஸ்டிடியூட் நடத்திய திரைப்பட ரசனை வகுப்புக்களில் பயின்றவர்...மேலும் திரையுலக சம்பந்தப்பட்ட பல நுணுக்கமான விஷய ஞானம் பெற்றவர்... அவர், தமிழ்ப்பட தற்போதைய நிலைமை பற்றித் தம் கருத்துக்களை வெளியிட்டார்:

''ரஷ்யாவிலும், சீனாவிலும் சினிமா ஒரு பிரசார சாதனம்... அமெரிக்காவில் அது கலை சாதனம், பொழுது போக்கு சாதனம் ஆனால் இந்தியாவில்...!

கலையும் இல்லை பிரசாரமும் இல்லை. பொழுதுபோக்கு என்ற பெயரில் சமுதாயத்தைக் குட்டிச்சுவராக்குகிற படங்களே பெரும்பாலும் உருவாகின்றன.

வங்காளத்தில் சத்யஜித்ரே, மிருணாள் சென், ஹிந்தியில் ஷ்யாம் பெனகல், சயீத் மிர்ஸா, கன்னடத்தில் ஜி. வி. ஐயர், கிரீஷ் கர்னாட், கிரீஷ் காசரவல்லி, மலையாளத்தில் அடூர் கோபாலகிருஷ்ணன், எம். டி. வாசுதேவன் நாயர் போன்ற இயக்குனர்கள் வித்தியாசமான முறையில், மாறுபட்ட கருத்துள்ள யதார்த்த படங்களைக் கலையம்சத்துடன் எடுத்து இருக்கிறார்கள்.

இதுமாதிரி தமிழில் ஓடி ஓடித் தேடினாலும் ஒருவராவது கிடைப்பாரா என்றால் பெருமூச்சுதான் பதில்.

1931-லிருந்து 1983 முடிய 2731 தமிழ்ப் படங்கள் வெளியாகி உள்ளன. இவற்றில் ஒரு தமிழ்ப் படமாவது சிறந்த

✕ முத்துலிங்கம்





⌘ இதைவிட மோசமான வன்முறைக் காட்சிகளும் தான் இன்று விலைபோகின்றன

படம் என்று அகில உலகப் புகழ் பெற்றுள்ளதா... இத்தனைக்கும் உலகிலேயே அதிகமான திரைப்படங்கள் சென்னையில் தான் எடுக்கப்படுகின்றன. (1983-ல் 457 படங்கள்.)

இவ்வளவு தூரம் தொழில் முன்னேற்றம் அடைந்துள்ள ஒரு நகரில் எடுக்கப்படும் தமிழ்ப் படங்கள் தரத்தில் முன்னேறாமல் இருக்க என்ன காரணம்?

பெரும்பாலான தமிழ்ப் படங்கள் பிற மொழிப் படங்களின் தழுவல்கள்... அல்லது ஏற்கெனவே தமிழில் வெளிவந்த படங்களின் மறு அவதாரங்கள்! ஒரு சிறந்த தொடர்பு முறை சாதனமான திரைப்படத் துறை தமிழ் மொழியில் ஒரு சில ஆபாச நடவைக்காரிகள் காலடியில் (!) அடமானம் வைக்கப்பட்டிருக்கிறது என்றால் அது மிகையல்ல.

சினிமாவில் திரும்பத் திரும்ப மரத்தைச் சுற்றிச் சுற்றி வந்து பாடும் காதலர்கள் போலத் தமிழ்த் திரைப்படங்களும் திரும்பத் திரும்பக் காதலும் கல்யாணமும் பிரச்னையாகக் கொண்ட கதை, நட்சத்திர ஆதிக்கம் பாக்ஸ் ஆஃபீஸ் இவற்றைச் சுற்றியே வருகின்றன. மேல்நாட்டுப் படங்களிலிருந்தோ, இதர மொழிப் படங்களிலிருந்தோ கதைக் கரு, ஐடியாக்கள் மட்டுமின்றி காமிராக் கோணங்களைக் கூட தமதாக்கிக் கொள்கின்றனர்...

சினிமா என்பது ஒரு சூதாட்ட வியாபாரம்... இதில் கலை எங்கே வந்தது...

⌘ வீ. சுப்பிரமணியம்



⌘ விசு



ஏராளமாக செலவு செய்து படம் எடுக்கிறோம்... போட்ட பணம் வர வேண்டாமா அதனால் தான் இப்படி எடுக்கிறோம்'' என்பது திரையுலகினரின் இன்றைய வாதம்... வியாபாரம் என்று வரும்போது அதையும் தான் நேர்த்தியாகச் செய்யமாட்டேன் என்கிறார்களே! 1983-ல் வெளியான 116 தமிழ்ப்படங்களில் 22 தான் வியாபார ரீதியாக வெற்றி பெற்றுள்ளன. இவர்கள் வாதப்படி மீதிப் படங்கள் ஏன் வெற்றி பெறவில்லை? இவர்களுக்குக் கலையும் தெரியாது... வியாபாரமும் தெரியாது என்கின்றது...

இதையெல்லாம் காணும்போது தமிழ்ப் படங்கள் தரத்தில் உயரும் காலம் சமீபத்தில் இடையாது என்று தோன்றுகிறது'' என்று ஆதங்கப்பட்டார் திரு. சுப்பிரமணியம்...

அவரது கருத்துக்களையும் எமது கேள்விகளையும் சுமந்து கொண்டு தமிழ்த் திரையுலகின் மாறுபட்ட துறைகளைச் சார்ந்த பிரமுகர்களைச் சந்தித்தோம்.





⌘ டி. எம். சௌந்தரராஜன் ⌘ கங்கை அமரன்

நடிகர், கதாசிரியர், டைரக்டர் விசுவைச் சந்தித்த போது அவர் தம் கருத்துக்களை வெளியிட்டார்:

**''மக்கள் 'ஃப்ரூ' படங்களைத்தான் விரும்புகிறார்கள் என்றால் எடுப்பதில் என்ன தவறு?''**

''தமிழ்ப்பட உலகம் சிறப்பாக இருக்கிறது... ஏதோ ஓரிரு படங்கள் தவிர, தமிழ்ப் படங்களிலிருந்து தான் கதைகள் பிற மொழிகளுக்குப் போகிறதே தவிர, அங்கிருந்து இங்கு வரவில்லை என்று நிச்சயம் என்னால் கூற முடியும்... தமிழ்ப்படங்களில் தற்போது சதைப்பிடிப்பான கதையும், சம்பவக் கோவைகளும் நிச்சயம் உள்ளன. அகில இந்திய ரீதியில் பார்த்தால் நகைச்சுவை அம்சத்தில் தமிழ்ப்படங்கள்தான் முன்னணியில் நிற்கின்றன... படங்களின் எண்ணிக்கை... டெக்னீஷியன்களின் திறமை ஆகியவற்றிலும் நாம் முன்னணியில் இருக்கிறோம்...

கலைப்படம் என்றெல்லாம் கூறப்படுகிறது... ஒரு சில பேர்கள் மட்டுமே பார்த்து ரசிக்கக் கூடிய இப்படங்களைத் தயாரிப்பது நேரத்தை வீணாக்குவது போலாகும்.

மக்கள் எதனை விரும்புகிறார்களோ அதை அளிப்பது தான் எங்களது கடமை...

மக்கள் 'ப்ளு' படங்களைத் தான் விரும்புகிறார்கள் என்றால் அத்தகைய படங்களைத் தயாரிப்பதில் தவறு ஏதுமில்லை. 'ரெகார்ட் டான்ஸ்' பார்க்க வேண்டும் என்று விருப்பப் படுபவர்களிடம், பரதநாட்டியத்தை ஆடிக் காண்பிப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது?

எனக்கு 'அவார்ட்'களில் நம்பிக்கையும் இல்லை... விருப்பமும் இல்லை...

மக்களுக்கு 'சகலகலா வல்லவன்' படம் தான் பிடிக்கிறது என்றால் அதைப்போலவே நூறு படங்களை எடுக்கத் தயாராக இருக்கிறேன். எப்போது அதைப் பிடிக்காமல் ஒதுக்குகிறார்களோ, அப்போது வேறு மாறுபட்ட படத்தை எடுப்பேன்...

ஒரு படத்தைப் பார்த்துப் பாதிக்கப்பட்டு அதை அடிப்படையாகக் கொண்டு சிலமாற்றங்களுடன் வேறு படம் எடுப்பதில் தவறு ஏதும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.. பத்திரிகை என்று எடுத்துக் கொண்டாலும் வந்த கதைகளே மாற்றங்களுடன் வேறு கதையாக வருவதையும் துணுக்குகள் வருவதையும் காண முடிகிறது... மக்களுக்குப் பிடிக்கிறதா? அவர்கள் ரசிக்கிறார்களா என்பது தான் கேள்வி. இப்படித்தான் 'மேஜர் சந்திரகாந்த்' படத்தால் பாதிக்கப் பட்டு, மாற்றங்களுடன் 'கீழ்வானம் சிவக்கும்' எழுதினேன்... மக்கள் ஏற்றுக்கொண்டனர். 'மனோகரா'வைச் சில மாற்றங்களுடன் 'ராஜ தந்திர'மாக எழுதினேன்... மக்களினிடையே வரவேற்பு பெற்றது... DCR எனப்படும் தினசரி கலெக்ஷன் ரிப்போர்ட் தான் எங்களது வேதம்...

சினிமாக்களில் காட்டப்படும் செக்ஸ் மற்றும் வன்முறைக் காட்சிகளால் மக்கள் கெடுகிறார்கள் என்று கூறப்படுவதை நான் ஆமோதிக்கவில்லை... கெடுபவர்கள் எப்படியும் கெட்டுப் போவார்கள்...

வாழ்க்கையில் நடப்பதைத் தான் சற்று மிகைப்படுத்திப் படம் எடுக்கிறோம்... மிகையையும் இயற்கையாக நடப்பது போன்ற மாயையை ஏற்படுத்தி மக்களுக்குக் கொடுக்கிறோம்... அவ்வளவுதான்...

இன்று இயக்குனர்களின் ஆதிக்கத்தில் தமிழ்ப்பட உலகம் உள்ளது... டெக்னிஷியன்களுக்கு மதிப்பு உள்ளது... அதிகப்படி பந்தாக்கள் இல்லாமல் தமிழ்ப்பட உலகம் ஆரோக்கியமாகவ் சிறப்பாக இருக்கிறது என்பது எனது கருத்து'' என்றார் விசு.

''இதோ பாருங்க நீங்க கணக்கு வாத்தியாரா இருக்கலாம். அதுக்காக எங்கிட்ட 'நீ என்னை எத்தனை சதவிகிதம் காதலிக்கறே'ன்னு கேட்கறது கொஞ்சமும் நல்லாயில்லே ''

—எம். பாஸ்கர்.



## ''இன்று வானம் தான் எல்லை''

தயாரிப்பாளர் **திரு.ஏ.வி.எம். சரவணனைச்** சந்தித்துக் கேட்டபோது அவர் கூறியவை:

''தமிழ்ப்பட உலகம் ஆரோக்கியமாக இருக்கிறது என்பதுதான் என் அபிப்பிராயம்... பெரிய பட்ஜெட் படமோ, சிறிய பட்ஜெட் படமோ, எதுவானாலும்சரி, படம் சிறப்பாக அமைந்து, மக்களிடையே வரவேற்பும் பெற்று விடுமானால் அதன் வெற்றிக்கும் வசூலுக்கும் வானம் தான் எல்லை... முன்பு இருந்ததற்குத் தற்போதைய இந்நிலை வளர்ச்சியாகும்...

இன்றைய தமிழ்ப்பட உலகில் வியாபார நோக்கு தான் அதிகம் என்று ஒப்புக்கொள்கிறேன்... என்ன செய்வது, அவரவர் ஏராளமாகப் பணம் போட்டுப் படம் எடுக்கும் போது மக்களின் ரசனை, விருப்பத்திற்கேற்ப படம் எடுத்து வெற்றியடைய வேண்டும் என்றுதானே எதிர்பார்ப்பார்கள். அதிகமான படங்கள் வெளியாகிப் போட்டியும் இத்தொழிலில் நிலையற்ற தன்மையும் இருப்பதால் மாறுபாடாகச் செய்யச் சற்று பயமாகத்தான் உள்ளது...

இதற்கு அடிப்படையாக இன்னொன்றையும் கூறியாக வேண்டும்... தயாரிப்பாளரோ, இயக்குனரோ, நடிகரோ எவரானாலும் சரி, அவரது திறமை அவரது முந்தைய படத்தின் வெற்றி, தோல்வியைக் கொண்டே படவிநியோகஸ்தர்களாலும்பண முதலீடு செய்பவர்களாலும் கணிக்கப்படுகிறது... ஒட்டுமொத்தமாக அவர் செய்துள்ளதை எவரும் பார்ப்பதில்லை... இதனால் ஒவ்வொரு படத்திலும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருக்கிறது. ஒரே சமயத்தில் ஒரே படம் செய்யும் திரு. பாக்கியராஜ் போன்றவர்கள் இந்த நிலையற்ற தன்மையினால் கம்பி மேல் நடக்கும் நிலையில் உள்ளனர்.

அந்த நாட்களில் ஒரு நடிகர் தமது ஊதியத்தை அதிகமாக்கிக் கேட்கிறார் என்றால், பல படங்களில் நடித்துப் பெரும் புகழ் பெற்று ஓரளவுக்கு உயர்ந்த பிறகு தான் கேட்பார்கள்... ஆனால் இன்றோ... ஒரு படத்தில் நடித்து அப்படம் வெற்றியடைந்து விட்ட உடனே நடிகர்கள் பல மடங்கு உயர்த்தித் தமதுஊதியத்தைக்கேட்க ஆரம்பித்து விடுகின்றனர்... ஒரு படத்தின் வெற்றி பலரது கூட்டு உழைப்பினால் என்பதை அவர்கள் சிந்திப்பதில்லை... இப்படியாகப் பலவித நிர்ப்பந்தங்கள் எங்களுக்கு...

ஜனாதிபதி பரிசு பெறும் ஆசை எனக்கும் தான் உண்டு... ஒரு பிரபல டைரக்டரிடம் ஜனாதிபதி பரிசு பெறும் விதமாகப் படமெடுத்துத் தாருங்கள், எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை என்று நான் கேட்டுக் கொண்டேன்...

அதற்கு அவர் அளித்த பதில்: ''வெற்றி பெறும் படமாக எடுத்துத் தருகிறேன்... ஜனாதிபதி பரிசு பெறும் படமாக எடுக்க

---

முயற்சி செய்து, அதற்குப் பரிசு கிடைக்கவில்லையானால், உங்களுக்கும் பெயர் போகும், எனக்கும் பெயர் போகும், பண நஷ்டம் வேறு உங்களுக்கு... ஜனாதிபதி பரிசைக் குறிக்கோளாகக் கொண்டு நான் படமெடுக்கும் போது அது என் சொந்தப் படமாக இருக்கும்... ஏனெனில் என் கூலி கிடையாது... படத்திற்குப் பரிசு கிடைக்காவிடினும் தாங்கிக் கொள்ள முடியும் என்றால்' என்றார்.

இன்னொன்றையும் கூற வேண்டும்... இப்படிப் படமெடுத்தால் ஜனாதிபதி பரிசு பெறும் வாய்ப்பு உண்டு என்று கணிக்க முடிவதில்லை.... நான் நடுவராக இருந்திருந்தால் சென்ற ஆண்டுக்கான சிறந்த படத்துக்கான பரிசை 'இனியெங்கிலும்' என்ற மலையாளப் படத்திற்கு அளித்திருப்பேன்... நாட்டின் உற்பத்தித் திறனைப் பெருக்கமக்கள் பாடுபட வேண்டியதன் அவசியத்தைஉணர்த்தும் விதமாகப் படம் எடுக்கப்பட்டிருந்தது.. பிரசாரப் படம் மாதிரியும் இல்லாமல் ரசிக்கும்படியும் இருந்தது... ஆனால் பரிசு அப்படத்திற்குக் தரப்படவில்லை...

தயாரிப்பாளரும் இயக்குனரும் ஒருவராக இருந்தால் ஒருமித்து நோக்கி சில பரிசோதனைகளைச் செய்ய இயலும்...

உதாரணமாக 'அலைகள் ஓய்வதில்லை' படத்தை நான் எடுத்திருந்தால் க்ளைமாக்ஸ் காட்சியில் கதாநாயகன் பூணூலையும், கதாநாயகி சிலுவையையும் அறுப்பதான காட்சியை ஜீரணித்து அனுமதித்திருக்க முடியாது என்றால், திரு. பாரதிராஜா தைரியமாக அக்காட்சியை எடுத்ததோடு மட்டுமின்றி நம்மை ஒப்புக் கொள்ளவும் செய்து விட்டார்...

செக்ஸ், வன்முறைக் காட்சிகள் பற்றிக் கூறினீர்கள்... மக்களின் ரசனைக்கேற்ப இக்காட்சிகள் நடுவில் சற்று அதிகம்தான் இருந்தன... தற்போது மக்கள் ரசனையில் மாற்றம் உள்ளதைக் காண்கிறோம்... தற்போது சற்றுக் குறைவாகத்தான் இடம் பெறுகின்றன.''

**மசாலப் படங்கள் எடுக்கவும் மண்டையில் மசாலா இருந்தால்தான் இயலும்!"**

ஒளிப்பதிவாளர் பாபு தமது கருத்துக்களை வெளியிட்டார்:

''பொதுவாக இன்று ஒரு தவறான அபிப்பிராயம் நிலவி வருகிறது... 'சென்டிமென்ட்' படங்களுக்கு ஒளிப்பதிவு செய்வது தான் கஷ்டம்... மசாலாப் படங்களுக்கு ஒளிப்பதிவு செய்வது சுலபம் என்றும் கருதப்படுகிறது. இது சரியானதல்ல... நல்ல லொகேஷனைத் தேர்ந்தெடுத்து படமெடுக்கும் போது ரிசல்ட் தானாக சிறப்பாக வரும்... சாதாரண ஒளிப்பதிவாளர் கூட நல்ல லொகேஷனில் சிறப்பாக எடுக்க இயலும்... ஆனால் மசாலாப் படங்களில் 'ஆக்ஷன்' காட்சிகளைப் படமாக்குவது எவ்வளவு கடினம் என்று அனுபவத்தில் தான் தெரியும்...

தவறுகள் செய்யும் போது 'மூளையில் மசாலா இருக்கா' என்று வீட்டில் கேட்பார்கள்... மசாலா படம் எடுப்பதற்கும் மண்டையில் மசாலா இருந்தால்தான் எடுக்க இயலும்.

மேல்நாட்டுப் படங்களை வீடியோகேஸட்களில் கொண்டு வந்து 'வீடியோ'வில் போட்டுப் பார்த்துக் காப்பி அடித்துத் தமிழ்ப்படம் எடுப்பதாகக் கூறினீர்கள்... நாங்கள் அவ்வாறு செய்வதில்லை...அவ்வாறு வேறு எவரேனும் செய்வதாகத் தெரியவில்லை... ஒவ்வொரு காட்சியையும் படத்திற்கு ஏற்றவாறு பிளான் செய்து எடுக்கிறோம்...

எங்கள் யூனிட்டில் பாலுணர்ச்சியைத் தூண்டும் விதமாகப் படமெடுப்பதைத் தவிர்க்கிறோம்... இலை மறைவு காய் மறைவாகத்தான் காட்சிகளை அமைக்கிறோம். பெண்களும் படம் பார்க்கிறார்கள் என்பதை மனத்தில் கொண்டு தான் காட்சிகளை அமைத்து எடுக்கிறோம். ஓரிரு காட்சிகள் சற்று மீறி இருக்குமானால் அக்காட்சிகள் படத்தில் கதையோட்டத்திற்கு அடிப்படைத் தேவை உள்ளவையாக இருக்கும். உதாரணத்திற்கு 'மயங்குகிறாள் ஒரு மாது' படத்தைக் கூறலாம்.

இன்று மக்களுக்கு நிறைய விஷயம் தெரிகிறது... ஒளிப்பதிவாளரின் திறமையைக் கண்டு பாராட்டிப் படம் ஓடும்போதே

கைதட்டிப் பாராட்டுகிறார்கள் என்றால் நாம் எவ்வளவு முன்னேறி உள்ளோம் என்று புரிந்து கொள்ளலாம்''

**"மெட்டுக்குப் பாட்டுப் போடுகிறோம் என்பதை விட மெட்டுக்கு வார்த்தைகளை அமைக்கிறோம் என்பதே சரியானது"**

தமிழக சட்ட மேலவை உறுப்பினராக இருக்கும் பாடலாசிரியர் **திரு. முத்துலிங்கம்** கூறியது:

''முந்தைய படங்களில் சிச்சுவேஷனுக்கு ஏற்றாற்போல் பாட்டுகள் எழுதப்பட்டன. இதனால் பாடல்களில் கருத்து இருந்தது. ஆனால் தற்போதைய படங்களில் கதையே இருப்பதில்லை... இதனால் வாழ்வியல் கருத்துக்கள் பாடல்களில் இல்லை.

பழைய படங்களில் காதல் டூயட் பாட்டுக்களில் கூட சமுதாயக் கருத்துக்கள் இடம் பெற்றன...

தற்போது பாலுணர்ச்சியைத் தூண்டும் பாடல்களைத்தான் எழுத வேண்டிய நிர்ப்பந்தம் உள்ளது... கருத்துள்ள பாடல்களை எழுதினால் ஆதரவு இருப்பதில்லை.

அப்படியும் அத்தி பூத்தாற்போல் சில நேரங்களில் கருத்துள்ள பாடல்களை நாங்களும் எழுதுகிறோம்.

முன்பெல்லாம் பாட்டுக்கேற்ற மெட்டு போடுவார்கள். ஆனால் தற்போது ட்யூனுக்கு ஏற்பத்தான் பாட்டு. சில ட்யூன்களில் சில சொற்கள்தான் அடங்கும்... சாமர்த்தியமாக முடிந்த அளவுக்குப் போடுகிறோம்.

மெட்டுக்குப் பாட்டு போடுகிறோம் என்பதைவிட, மெட்டுக்கு வார்த்தைகளைக் கொடுக்கிறோம் என்பதே சரியானது... இதனால் சினிமாவுக்குப் பாடல்கள் எழுதுவது அவ்வளவு சுலபம் என்று எவரும் எண்ண வேண்டாம்... இதற்கு இசைஞானமும், தாள ஞானமும் அவசியம்.. இல்லையென்றால் எவ்வளவு பெரிய இலக்கியத் தேர்ச்சி இருந்தாலும் சினிமாப் பாடல் எழுத முடியாது.

தற்போது பத்திரிகை, பேனர் விளம்பரங்களில் பாடலாசிரியர் யார் என்று போடுவதில் அவ்வளவாக அக்கறை காட்டுவதில்லை... இசை மட்டுமே முக்கியமாகக் கருதப்படுகிறது... தத்தகாரம் மட்டுமே பாடலாகி விடுமா?

**''சுருதி இல்லாமல் பாடினாலும் பரவாயில்லை"**
**டி: எம். சௌந்தர்ராஜன் சொன்னது:**

''இன்றைய திரையுலகம் கலை வளர்ச்சிக்காக இல்லை... அதில் சம்பந்தப்பட்டிருப்பவர்களின் வாழ்க்கை வளர்ச்சிக்காகத்தான் செயல்படுகிறது...

சிந்தனை சக்தி இல்லாத, கதையம்சம் இல்லாத, இள உள்ளங்களைப் பாழ்பண்ணும் செக்ஸ் காட்சிகள் நிறைந்த, 'மெலடி' இல்லாமல் ஒரே ஆர்ப்பாட்டமான இசை உள்ளதான படங்கள் வெளியாகும் நிலையில் மக்கள் எதிர்ப்புத் தெரிவிக்காமல் பார்த்து ரசிப்பதைக் காணும்போது இதெல்லாமும் ஒருவித வளர்ச்சிதானோ என்று எண்ணத் தானே தோன்றுகிறது!

சிச்சுவேஷனுக்கு ஏற்றாற்போல் பாடல்கள் தேவையில்லை. கம்பீரமான குரலுடைய கதாநாயகனுக்கு அரைத் தொண்டையில் பின்னணி பாடினால் போதும். இசைக் கருவிகள் என்ற பெயரில் அடுப்பு ஊது குழலும் ஒரு இசைக்கருவி, சுருதியைவிட்டு விலகிப் பாடினாலும் பரவாயில்லை, பின்னணி பாட பாடகன்தான வேண்டுமென்பதில்லை எவர் வேண்டுமானாலும் பாடலாம் — இப்படி ஒரு நிலை தமிழ்த் திரை இசையில்... ஆனால் மக்கள் எதிர்க்காமல் கேட்டுவிட்டுப் பேசாமல் போகிறார்களே... சொல்வதற்கு என்ன இருக்கிறது?

சிவன் கோவில் சூழ்நிலைக்கு சில வாத்தியக் கருவிகள் கொண்டு இசை அமைப்பார்கள்.. அதுமாதிரி பெருமாள் கோவில்... அம்மன் கோவில்... என்று காட்சிக்கேற்ப தனித்தனி இசைக்கருவிகள் கொண்டு இசை அமைப்பார்கள்... தற்போது அதுமாதிரி எதுவும் இடையாது... ஏகப்பட்ட வாத்தியக் கருவிகளைக் கொண்டு ஏதேதோ சத்தங்களைத் தோற்றுவித்து மக்கள் மனத்தில் 'பிரமை'களை ஏற்படுத்தி விடுகின்றனர்...

இரட்டை அர்த்தப் பாடல் என்பது அக்காலத்திலும் உண்டுதான்... 'காட்டு ராணி கோட்டையிலே கதவுகளில்லை' என்று பாட்டுப் போட்ட கவிஞர் கண்ணதாசன் அடுத்த அடியிலேயே 'காவல்காக்க கடவுளைன்றி ஒருவருமில்லை' என்று தத்துவத்தையும் போட்டார்... ஆனால் தற்போது இரட்டை அர்த்தப் பாடல்கள் விரசத்தைத் தூண்டுவதாக உள்ளன. கருத்துச் செறிவான பாடல்களை எவ்வளவு தேடினாலும் வருவதில்லை...

ஆனால் இந்நிலை நீடிக்காது... மக்கள் மாறுவார்கள். திறமைக்கு நிச்சயம் அங்கீகாரம் கிடைக்கும்'' என்றார் திரு. டி. எம். எஸ்.

**"தமிழர் பண்பாட்டுக்கு ஏற்பப் படமெடுத்து ஏமாந்தவர்கள் நிறைய பேர் உள்ளனர்"**

தயாரிப்பாளர், பாடலாசிரியர், இசையமைப்பாளர் திரு. கங்கைஅமரனைச் சந்தித்த போது:

''இன்று இசைக்கேற்ப பாடல்கள் எழுதப்படும் நிலைதான் தமிழ்ப்படங்களில் உள்ளது.

முன்பு பாடல்களுக்கு ஏற்ப இசை போடப்பட்டது... ஆனால் சில ஹிந்திப் பாடல் மெட்டுக்களைத் தமிழ்ப்பாட்டுக்கு எடுத்துக் கொண்ட போதும் மேற்கத்திய இசை தமிழ்ப் பாட்டுக்குக் கையாளப்பட்ட போதும் முதன் முதலாக இசைக்கேற்ப பாட்டுப் போடும் முறை விஸ்வநாதன் ராமமூர்த்தி காலத்திலேயே புகுத்தப்பட்டது... திரு. பாபநாசம் சிவன் தாமே ட்யூன் போட்டு அந்த ட்யூனுக்கு ஏற்பக் கருத்துச் செறிவுள்ள பாடல்களை இயற்றுவார்... கவிஞர்கள் மனம் வைத்தால் ட்யூனுக்கு

ஏற்ப பாட்டுப் போடும் போதும் கருத்துச் செறிவுள்ள பாடல்களை நிச்சயம் இயற்ற முடியும்...

தற்போது பாடல்களை விட இசைக்கு மக்களிடையே வரவேற்பு அதிகமாகிவிட்டது. பாட்டு எழுதி அதற்கு ட்யூன் போடும் போது ஓரிரண்டு ட்யூன்களில் தான் அது அடங்கும். டியூன் அமைப்பது சிரமம்.... முதலில் ட்யூன் போட்டால் 'வெரைட்டி'யாக பலவித டியூன்கள் போட்டுச் சிறப்பானதைத் தேர்ந்தெடுக்கலாம்...... இப்படிப் பலவித அனுகூலங்கள்....

நமது சாஸ்திரிய சங்கீதத்துடன் மேற்கத்திய இசையை இணைப்படுத்தி இசை போட்டால் மக்கள் ஆர்வத்துடன் ரசிக்கிறார்கள். இம்மாதிரி முதலில் செய்தவர் திரு. இளையராஜா... 'ராத்திரியில் பூத்திருக்கும்' என்ற பாடல் இம்மாதிரியானது தான்... மக்களிடையே இப்பாட்டு பெற்றிருக்கும் வரவேற்பு அனைவரும் அறிந்தது.

'முக்கல்... முனகல்' பாடல்களைப் பற்றி குற்றம் சாட்டினீர்கள். என்ன செய்வது? 'செக்ஸ்' பிரியர்கள் அம்மாதிரி பாடல்களை எதிர்பார்க்கிறார்களே... அவர்களையும் திருப்தி செய்துதானே ஆகவேண்டும்?...

தமிழ்த் திரைப்பாடல்களின் தரம் கங்கை அமரன் பாடல்கள் எழுத ஆரம்பித்த பிறகுதான் குறைந்து விட்டது என்று ஒப்புக் கொள்கிறேன். தற்போது அம்மாதிரி பாடல்கள் எழுதாமல் மாறுபாடாக எழுதுகிறேன்.

இன்று தமிழ் திரைப்படம் 100 சதவீதம் வியாபாரம் ஆகிவிட்டது. ஏன்... மற்ற பெரும்பாலான மொழிப்படங்களும் அப்படித் தான்... மிருணாள் சென் போன்றவர்களும் குளியல் காட்சிகளைப்படங்களில் புகுத்துகிறார்களே...

தமிழ் பண்பாடு கலாச்சாரத்துக்கு ஏற்ற படங்கள் வருவதில்லைதான்.... அம்மாதிரி எடுத்து ஏமாந்தவர்கள் நிறையபேர் உள்ளனர்... ஸ்ரீதரின் கலைக்கோயில், பாரதிராஜாவின் காதல் ஓவியம் ஆகியன உதாரணங்கள்... இவற்றின் வியாபாரத் தோல்வியைக் காணும்போது தமிழ்ப்பட ரசிகர்கள் தங்கள் ரசனையை உயர்த்திக் கொண்டால் தான் தரமான படங்கள் வர முடியும் என்றுதானே கூற வேண்டியிருக்கிறது.

• • • •

தமிழ்த் திரையுலகின் இன்றைய அவல நிலை குறித்துச் சுட்டிக்காட்டி இதை ஏன் நீங்கள் சரி செய்யக் கூடாது என்கிற நோக்குடன் திரையுலகப்பிரமுகர்களைசந்திக்கப் போனால் 'வீட்டிற்குத் தானாக தீ வைத்து விட்டு ஒருவன் தெருவுக்கு ஓடி வந்து தீ... தீ...'என்றது போல' இவர்களே தமிழ்த் திரையுலகின் ஈன நிலைபற்றி ஒப்பாரி வைத்ததைக் காணும்போது இந்த நிலைக்கு உண்மையிலேயே காரணகர்த்தா யார் என்று புரியாமல் முடியைப் பிய்த்துக் கொள்ளும் நிலைதான் நமக்கு ஏற்படுகிறது.

பேட்டி, கட்டுரை: நாயகன்



## அருள்வாக்கு

ஆல விருக்ஷத்துக்கு எத்தனையோ உபயோகங்கள். ஒரு பெரிய ஸைன்யமே அதன் கீழ் தண்டு இறங்கலாம். பரோபகாரத்துக்கு அது ஒரு ரூபகம். அத்தனை பெரிய மரத்துக்கு இத்தனூண்டு விதை. இந்த அணுமாத்திர விதையில் அந்தப் பெரிய மரமே இருப்பது, அணுவில் அணுவாயுள்ள பரமாத்மாவே அகண்ட பிரம்மாண்டமாயும் இருக்கிறார் என்பதை நினைப்பூட்டுகிறது. எல்லா மரத்துக்கும் தானே இப்படி. என்றாலும் மற்ற மரம்போல ஆலுக்கு எவரும் விதை ஊன்றுவதில்லை. அதுவாகவே எப்படியோ முளைத்துக் கொள்கிறது. இது ஈச்வரன் ஸ்வயம்பு, தான்தோன்றி என்ற தத்துவ விளக்கமாய் இருக்கிறது. தானே விழுது விட்டுத் தன்னைத் தாங்கிக் கொண்டு அந்த பலத்தில் மேலும் மேலும் விஸ்தாரமாகிக் கொண்டே போகிறது. அடையாற்றில் ஆலமரத்தைப் பார்க்கவே கூட்டம் கூட்டமாகப் போகிறது. ஈச்வரன் பிறர் தாங்குதல் வேண்டாத நிராலம்பன் என்பதற்கு இது எடுத்துக் காட்டு போலிருக்கிறது. ஒரு பாகம் பட்டுப் போனாலும் மற்ற விழுதுகள் அதிலிருந்து தோன்றும் விழுதுகள் என்று பிற பாகங்கள் பசுமையாய் இருந்து கொண்டே இருப்பதால் ஈச்வரனின் நித்யத்வத்தையும் காட்டியதாகிறது. ஒரே தாயும், தந்தையுமான அவனிடமிருந்தே ஸகல ஜீவ ஜகத்துக்களும் விஸ்தாரமாயிருப்பதற்கு திருஷ்டாந்தம் போல வடவிருக்ஷமானது ஒரே தாய் மரத்திலிருந்து விஸ்தாரமாய்க் கொண்டே போகிறது.

இப்படியாக ஸம்ஸார ஸாகரத்தில் அலைபாய்கிற நமக்கு ஆலிலையைக் காட்டி நிலையான நித்யத்துவத்தை நிராலம்ப தத்துவத்தை உணர்த்துகிறான் வடபத்ரசாயி.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

# வாழும் குமரிமுனை

அவள் நித்ய கன்னிகை. ஆனால் அவளுடைய வயதை அறிந்து கூற முடியாது. அவள் இளங்குமரி. ஆனால் எல்லா உலகங்களுக்கும் தாய். அவள் மோனத்தவஞ்செய்யும் காரிகை. ஆனால் உலகங்கள் அனைத்தையும் இயக்கும் சக்தி. அவள் அழகின் உறைவிடம். ஆனால் விகாரங்களும் அவளால் தோன்றுபவையே! அவள் உலக ரட்சகி. ஆனால் அழித்தலும் அவள் காரியம்.

வானம் மேகங்கள் சூழ்ந்திருக்கிறது. அசாத்தியமான கடற்காற்று. குமரிமுனையில் பஸ்ஸிலிருந்து இறங்கியதும் அருகிலேயே இருக்கிறது கோவில். திருநெல்வேலியிலிருந்து ரயில், பஸ் வசதிகள் உண்டு.

கோவில் மாலை ஐந்தரை மணிக்குத்தான் திறப்பார்கள். அதுவரை அங்கே உள்ள பல சின்னச் சின்னக் கடைகளில் சங்கு, சிப்பி, பொம்மைகள், நார்ப்பைகள் முதலியவற்றைப் பார்த்து மகிழலாம். இஷ்டமிருந்தால் தாழை நார்ப்பை ஒன்று வாங்கலாம். வண்ண வண்ணமாய் அழகாகச் செய்யப்பட்டிருக்கின்றன. உறுதியாகவும் இருக்கின்றன.

பிற்பகல் இரண்டரை மணிக்கு விவேகானந்தர் பாறைக்குச் செல்ல விசைப்படகு போக ஆரம்பித்து விடுகிறது. மூன்று நிமிடங்களில் கொண்டு இறக்கி விடுகிறார்கள். ஆனால் படகு நிரம்புவதற்கு வெகு நேரம் காத்திருக்கிறோம்.

தூரத்தில் பாறை மீதுள்ள கட்டிடங்கள் புலனாகும் போதே சுவாமி விவேகானந்தரைப் பற்றிய நினைவுகள் எழுகின்றன. பாரதநாட்டின் கலாசாரப் பெருமையையும், இந்து மதத்தின் ஆன்மிகப் பெருமையையும் உலகறிய எடுத்துரைத்த மகான். அவருடைய நினைவாலயம் குமரிமுனையில் கட்டப்பட்டிருப்பது தமிழ்நாட்டுக்கே பெருமையல்லவா?

நாங்கள் சென்ற படகு இந்திய ஒருமைப்பாட்டுக்கே ஒரு சின்னமாகத் திகழ்ந்தது. குஜராத்தியர், மராட்டியர், வங்காளிகள், பஞ்சாபிகள், முஸ்லிம்கள், மலையாளிகள் எல்லோரையும் படகில் பார்க்க முடிந்தது! அத்தனை பேரும் பாறையை அடைந்தவுடன் வரிசையில் நின்று அனுமதிச் சீட்டுப் பெற்று நினைவாலயத்திற்குச் சென்ற காட்சி வியப்பளித்தது. குழந்தைகள் கூட அதிகம் பேசவில்லை. மெல்லிய குரலில் பேசிக்கொண்டு, நெருக்கியடிக்காமல் அமைதியாகச் சுற்றிப் பார்த்தார்கள். இங்கே மட்டும் இது எப்படி சாத்தியமாகிறது? இந்தக் கட்டுப்பாடும் அமைதியும் நம்பவே முடியவில்லை. சுவாமிகளுக்கு இன்றளவும் ஏதோ ஒரு மகத்தான சக்தி இருந்து வருகிறது என்பதில் சந்தேகமே இல்லை.

முதலில் ஸ்ரீபாதமண்டபத்தை அடைகிறோம். மத்தியில் கர்ப்பக்கிருகத்தைப் போன்ற அமைப்பை உடைய மண்டபம். பல படிகள் ஏறிச் செல்ல வேண்டியிருக்கிறது. எங்கும் தூய்மை. அப்பழுக்கு இல்லாமல் பளபளவென்று துப்புரவாக இருக்கிறது. உள்ளே விமானத்தின் கீழ் பாறையின் மீது ஒற்றைப் பாதச் சுவடு காணப்படுகிறது. அது தேவி தவம் செய்த இடமென்றும், தேவியின் பாதம் என்றும் கூறுகிறார்கள். பஞ்சாக்னி மத்தியிலே தேவி தவம் செய்த கதை நாம் அறிந்தது தானே! ஒரு காலை மடித்துத் தூக்கி ஒரு காலை ஊன்றி, தலைக்கு மேல் ஜபமாலையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு தவம் செய்யும் தேவியை மனக்கண்களில் தரிசனம் செய்கிறோம். அந்தப் பாதச் சுவட்டுக்கு மேலே கண்ணாடி போட்டிருக்கிறார்கள். ஜன்னல்கள் வழியாகத் தரிசனம் செய்யலாம். முன்னால் உண்டி வைத்திருக்கிறார்கள். ஆனாலும் மக்கள் ஜன்னல் வழியாகக் காசுகளை வீசிப் போடுகிறார்கள்.

சுவாமி விவேகானந்தரின் உருவச்சிலை வைக்கப்பட்டிருக்கும் பெரிய கூடம் நம்மை மேலும் வியப்பிலாழ்த்துகிறது. எவ்வளவு பெரிய கல் தூண்கள்? எத்தனை பெரிய உருவம்! இவற்றையெல்லாம் கரையிலிருந்து

✕ விவேகானந்தர் நினைவாலயமும், ஸ்ரீபாத மண்டபமும்.





✖ கன்னியாகுமரி அம்மன்

## தெய்வ தரிசனம்

கடல் சூழ்ந்துள்ள இந்தத் தீவுப்பாறைக்கு எப்படிக் கொண்டு வந்தார்கள்? எப்படி வேலை செய்தார்கள்? பிரும்மப் பிரயத்தனமாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

கண்களுக்குக் குளுமையான ஒளியும், நிலவிய அமைதியும் சுவாமி விவேகானந்தரின் உருவமும் நம் மனம் குளிரும்படி செய்கின்றன. எதிர்ப்புறத்தில் கதவுக்கு இருபுறங்களிலும் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் படமும், சாரதாமணி அம்மையாரின் படமும் சிறு மண்டபங்களில் வைக்கப் பட்டிருக்கின்றன. அந்தப் புனிதமான சூழ்நிலையை விட்டு வெளியே வர மனமில்லாமல் வருகிறோம்.

அதன் பிறகு தியான மண்டபத்தை அடைகிறோம். குழந்தைகளை அங்கே அனுமதிப்பதில்லை. மண்டபம் இருட்டாக இருக்கிறது. எதிர்ப்புறச் சுவரில் பிரணவ பீடத்தில் ''ஓம்''காரம் ஒளியுடன் திகழ்கிறது. இங்கே பிரணவ மந்திரத்தில் மனத்தை இருத்திச் சற்று நேரம் உலக நினைவுகளை மறந்து தியானம் செய்யலாம். எழுந்து வரவே சங்கடமாக இருக்கிறது. அங்கே அமர்ந்து தியானம் செய்பவர்களுக்கு நம்முடைய சலனத்தினால் மனச்சலனம் ஏற்படுமோ என்று தயங்குகிறோம். குமரி யன்னையைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆர்வத்தாலேயே எழுந்து வருகிறோம்.

சுற்றி வரும்போது மழைத் தண்ணீரைச் சேமிக்கக் கட்டியுள்ள பெரிய தொட்டிகளைப் பார்க்கிறோம். அவற்றைக் குளங்கள் என்று தான் கூற வேண்டும். ''எவ்வளவு அடி தண்ணீர் இருக்கும்?'' என்று கேட்டதற்கு, ''ஆறு ஏழு அடி இருக்கும்'' என்று கூறினார்கள். எகப்பட்ட மீன்கள் நீந்துகின்றன.

சூரிய அஸ்தமனக் காட்சியைப் பார்க்க ஆவலாக இருந்தும் மேகங்கள் சூழ்ந்திருந்த படியால் சூரியனைப் பார்க்கவே இல்லை. விவேகானந்தர் பாறையிலிருந்து குமரி முனையும் கோவிலும் கலங்கரை விளக்கமும் சர்ச்சும், சிறிய மண்டபங்களும் தூரத்தில் சிறு குன்றுகளும் பார்த்துக் கொண்டே இருக்கலாமென்று தோன்றுகிறது. தெற்கே திரும்பினால் தொடு வானம் வரை நீல நிறக் கடல், பொங்கி, சுழித்து, எழும்பி, பூநீர் சொரிந்து, பாறையில் அடித்து மோதித் திரும்பி, வழிந்து நுரை சிதறி, விளையாடி அலைமோதியும் மூன்று கடல்களின் சங்கமம். மனம் அப்படியே இந்தக்காட்சியில் லயித்துப் போகிறது.

''நீலநெருக்கிடையில் நெஞ்சுசெலுத்தி
நேரம் கழிவதிலும் நினைப்பின்றியே'' என்ற பாரதியாரின் வாக்கு உண்மைதான்.

மறுபடியும் படகில் ஏறிக் கரையை அடைந்ததும் கோவிலுக்கு ஆவலுடன் போகிறோம். நல்ல கூட்டம். அவசரமாகக் கோவிலில் முதல் பிராகாரத்தை வலம் வருகிறோம். பின்பக்கத்திலிருந்து ஸ்ரீபாத பாறையும், நினைவாலயங்களும் கடலில் நடுவே ஏதோ கனவுலகக் காட்சிபோலத் தெரிகிறது. கோவிலைச் சுற்றி புடவை விற்பவர்களும், மணிகள், சங்கு மாலைகள் விற்பவர்களும் மணல் விற்பவர்களும் ஒரே ரகளையாக இருக்கிறது. அடியார் கூட்டத்தோடு நாமும் உள்ளே செல்கிறோம். அடுத்த பிராகாரத்தை அடைந்ததுமே ஒரு சாந்நித்தியம் நமது நெஞ்சைக் கவர்ந்திழுக்கிறது.

**ஆனந்தி**

✖ பிரணவ பீடம்



புதியதொரு நினைவாலயத்தைப் பார்த்த நாம், இப்போது மிகவும் தொன்மை வாய்ந்த கோவிலைக் காண்கிறோம். கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே இந்தக் கோவில் இருந்ததாகக் கூறுகிறார்கள். தேவியின் வயதைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. இங்கிருந்து கொண்டு குமரியான பகவதி அம்மன் நாயகனை அடைவதற்காகத் தவம் செய்ததாகவும், அருகில் சுசீந்திரத்தில் உறையும் ஈசன் குறித்த நேரம் தவறிவிட்டபடியால் திரும்பிப் போய் விட்டார் என்றும், அன்று முதல் தேவி தவக் கோலத்திலேயே இருப்பதாகவும் தல புராணம் கூறுகிறது.

பல கல்வெட்டுக்கள் உள்ள கோவில். பாண்டிய மன்னரின் கல்வெட்டில் தேவியை ''தென்னவர் தெய்வம்'' என்று புகழப் பட்டிருக்கிறது. சோழ மன்னர்களும் தேவி பகவதியைப் போற்றி வணங்கியிருக்கிறார்கள். 18–ஆம் நூற்றாண்டில் சேர மன்னர் கர்நாடக நவாப்புடன் சேர்ந்து இந்தப் பிரதேசத்தை வென்றதால் சேர மன்னர் ஆட்சியின் கீழ் வந்தது. ஆக, மூவேந்தர்களும் குமரித்தாயை வணங்கி வழிபாடுகள் செய்திருக்கிறார்கள்.

வெளிப் பிராகாரங்களில் பதினொரு தீர்த்தங்கள் இருக்கின்றன. இவற்றில் மூழ்கி, கடலாடி தேவியை வணங்குவது விசேஷம்.

அதற்கெல்லாம்நேரமில்லாமல் அர்ச்சனைத் தட்டுடன் உள்ளே குனிந்து குனிந்து செல்கிறோம். இந்தக் கோவிலுக்கு வணங்கா முடிகள் செல்ல முடியாது.

சந்நிதி. அடாடா கையில் மாலையும் ஊருஹஸ்தமுமாக ஜோதிப் பிழம்புகளுக்கிடையே ஜொலிப்பது சின்னஞ்சிறுமியல்லவா? என்ன அழகு! என்ன சிரிப்பு! இதயத்தை இழுக்கும் பார்வை! அகன்ற முகம்! 'தேவி! ஜகத் ரக்ஷகி, அம்பிகே! பவானி! பகவதி!' என்றெல்லாம் தேவியை மனம் துதிக்கிறது.

முதலில் ஏற்பட்ட பரவசம் சற்று அடங்கியதும் நான்கு வரிசைகளாகத் தீபங்கள் ஒளிர்வதும், திருவாசியும் தெரிகின்றன.

சந்தனக் காப்பிட்ட முகம். செவ்வுதிற ஆடை. அகன்ற ஒட்டியாணம், வரிசை வரிசையாகப் பளபளக்கும் பொன்னாபரணங்கள் இடுப்பு வரை மறைக்கின்றன. மூக்குத்தியும் புல்லாக்கும் ஜொலிக்கின்றன.

மார்த்தாண்டன் என்பவன் ராஜநாகம் உமிழ்ந்த ரத்தினத்தை அரசனிடம் கொடுத்ததாகவும், அதை அரசன் குமரிக்கு மூக்குத்தியாகச் செய்து அணிவித்ததாகவும் ஒருகதை. மூக்குத்தியின் ஒளியை லைட் ஹௌஸ் வெளிச்சம் என்று எண்ணி ஒரு கப்பலோட்டி கரையை நெருங்கியதாகவும், அவனுடைய கப்பல் பாறையில் மோதிக் கவிழ்ந்ததால் அன்று முதல் கிழக்கு வாசலை அடைத்து விட்டதாகவும் ஒரு கர்ணபரம்பரைச் செய்தி. கிழக்கு வாசல் மூடித்தான் இருக்கிறது. வருடத்தில் ஐந்து தடவைகள் உத்ஸவ காலத்தில் தேவி நீராடி வரும் போது மட்டும் இவ் வாசல் திறக்கப்படும்.

தேவியை மீண்டும் சற்று தரிசனம் செய்வோம். அர்ச்சகர் பூஜை செய்கிறார். ஒன்றிரண்டு புஷ்பங்களைப் போட்டு அர்ச்சனை செய்யவில்லை. பிடிப்பிடியாகப் பூவிதழ்களை அள்ளி அள்ளிப் போடுகிறார். பீடம் மறைந்து அம்பிகையின் பாதங்கள் மறைந்து சேலைக் கொசுவத்துக்கும் மேல் குவிகிறது புஷ்பம்.

தீபாராதனை செய்கிறாரே! நாகரத்தினக் கதை உண்மையாக இருக்கலாம். ஒரே ஒளிமயம்! வைரக் கிரீடம் விண்மீன்களென ஜொலிக்கிறது. மார்பில் ஆபரணங்கள் தகதகவென்று ஒளி சிந்துகின்றன. சிவப்புப் புடவை இன்னும் சிவப்பாகத் தெரிகிறது. ''இந்திராகாந்தி அளித்த கிரீடம், நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று யாரோ சொன்னார்கள். பிரமையிலிருந்து விடுபட்டுப் பாரத நாட்டின் முனையில் நிற்கிறோம் என்ற உணர்வைப் பெற்று மனமாரப்பிரார்த்தனை செய்து கொள்கிறோம்.

கடற்கரையில் இன்னும் பல மண்டபங்களும் நினைவாலயங்களும் இருக்கின்றன. ஆதிசங்கர பகவத் பாதாள் தம் சீடர்களுடன் வீற்றிருக்கிறார். அந்த மண்டபத்துக்கு அருகிலேயே சுவாமி விவேகானந்தருக்கு இன்னொரு மண்டபம் அமைக்கப்பட்டிருக்கிறது. சற்றுத் தூரத்தில் காந்திமண்டபம். குஜராத், வங்காளம், கேரளம், தமிழ்நாடு எல்லாமே குமரியின் தாள்களில் இணைகிறது.

யாரும் வகுத்தற் கரிய பிராயத்த
ளாயினு மேயெங்கள் தாய் — இந்தப்
பாருள்எந் நாளுமோர் கன்னிகை என்னப்
பயின்றிடு வாள்எங்கள் தாய்.

—பாரதியார்

**கதிர்வீச்சு ஆபத்து**

கோழிக்கோடு மருத்துவக்கல்லூரி ஆஸ்பத்திரியில் புற்றுநோயாளிகளுக்கு சிகிச்சையளிப்பதற்காக இருக்கும் ரேடியோக் கதிர்வீச்சைப் பாய்ச்சும் விசேஷக் குழாய் காணாமல் போய் விட்டது. 3 மில்லிகிராம் எடை கொண்ட இக்குழாய் வாஷ்பேசினுக்கு அருகிலுள்ள குழாயில் சிக்கியிருந்ததை பாபா அணுசக்தி ஆய்வு நிலையத்திலிருந்து வந்த டாக்டர் எம். என். பூட்டானி என்ற விஞ்ஞானி தாம் வைத்திருந்த ஒரு கருவியின் மூலம் கண்டுபிடித்தார்.

தகவல்: டி. வி. கிருஷ்ணசாமி,
ஆதாரம்: தினமணி



# நீங்கள் கேட்டவை தராசு

○ எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? சிறு விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் வழங்கும் தமிழக அரசின் திட்டம் தேர்தல் ஸ்டண்ட் என்ற கருணாநிதியின் குற்றச்சாட்டு பற்றி...?

! ஒன்று மட்டும் நினைவில் வையுங்கள். தேசப் பொருளாதாரத்தில் இலவசம் என்பது ஒன்றுமே கிடையாது. ஒன்று இலவசமாக வழங்கப்பட்டால் இன்னொன்றின் மீது வரி உயரும்; அல்லது பணவீக்கத்தால் விலை ஏறும். கடைசியில் கஷ்டப்படப்போவது சாமானியரே. அது சரி...குமரிஅனந்தன் என்ன திட்டத்தை அறிவித்தாலும் (கல்கி 22.7.84) அது பற்றி நாலு மாதங்கள் முன்னதாகவே முதல்வர் சிந்தித்திருக்கிறாரே. அதுதான் அதிசயமாக இருக்கிறது. பள்ளி இறுதித் தேர்வில் தோல்வி காண்பவருக்கு பள்ளி மையங்களிலேயே 'டுடோரியல் காலேஜ்' நடத்த வேண்டும் என்று அனந்தன் கூறி வாய் மூடு முன்னர் முதல்வர் அதுபற்றியும் பல மாதங்களாகவே சிந்தித்து வந்திருக்கிறார்!

○ என். சோமணி, கிருஷ்ணகிரி.

? ஒரு ஜனநாயகவாதி எப்போது சர்வாதிகாரியாக மாற நினைக்கிறான்?

! தன் ஆட்சியே என்றும் நிலைத்திருக்க வேண்டும் என்று ஆசைப்படும்போது.

○ ஆர். பூபாலன், கிருஷ்ணகிரி.

? ஏழு வண்ணங்கள் சேர்ந்தால் – வானவில், ஏழு கன்னிகைகள் சேர்ந்தால் – சப்த கன்னியர் ஏழு முனிவர்கள் சேர்ந்தால் – சப்த ரிஷிகள், ஏழு அரசியல்வாதிகள் சேர்ந்தால்...?

! 'சப்த குழப்படியாளர்' என்ற பெயர் வாங்காமலிருக்க அடிப்படையான ஒரு செயல் திட்டம் உருவாக வேண்டும். சில பல கருத்து மாறுபாடுகள் இருந்தாலும் மாநிலங்களுக்கு அதிக அதிகாரம், பொருளாதார முன்னேற்றம், தொழில் வளப் பெருக்கம், வேலைவாய்ப்பு அதிகரிப்பு போன்ற அடிப்படை அம்சங்களில் கொள்கை ரீதியான ஒற்றுமை கண்டால் ஆதலுக ஒரே நிறத்திலும் ஜொலிக்கலாம்; வானவில்லாகச் சிதறியும் எழில் காட்டலாம்.

○ உஷா, சென்னை–95.

? காஷ்மீரில் நடந்தது கர்நாடகத்தில் நடக்குமா?

! காஷ்மீரில் நடந்தது ஹெக்டேக்கு முன் னெச்சரிக்கையாகிவிட அவர் உஷாராகி விட்டார். ஜனதா ஆட்சிக்கு அபாயமில்லை என்று துணிந்து கூறுவதுடன் இ. காங்கிரஸிலிருந்து சில எம். எல். ஏக்கள் ஜனதாவில் வந்து சேர்வார்கள் என்று கூட பேச ஆரம்பித்திருக்கிறார்! ஆக மொத்தம் எந்த மாநிலமானாலும் ஆட்சியைக் காப்பதோ, கவிழ்ப்பதோ, எம். எல். ஏக்களின் கையில் என்றாகி விட்டது. அவர்கள் பாடு கொண்டாட்டம்தான்.

○ எம். வடிவநாதன், வேதாரண்யம்.

? சத்துணவுத் திட்டம் விஸ்தரிப்பு குறித்து?...

## காஷ்மீரில் நடந்தது கர்நாடகத்தில் நடக்குமா?

! அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் விஷம்.

○ ராணியல் தயா, சென்னை–29.

? 'திருச்செந்தூர் கோவிலில் அதிகாரி கொலை யைத் தடுக்க முடியவில்லை. கொலைகாரர்களைப் பிடிக்க முடியவில்லை. எனவே அங்கிருப்பது கடவுள் அல்ல, சாத்தான்' என்று குமரி மாவட்டத்தில் பிற மதத்தினர் சொல்வது பற்றி...?

! பிறர் துன்பத்தில் குளிர் காய்கிற சிலர் அறியாமையால் அப்படிச் சொல்கிறார்கள்; மன்னித்து விடுவோம். பதிலுக்குச் சாத்தான் வேறு எங்கெங்கே குடியிருக்கிறார் என்று பட்டியலிடப்புகுந்தால் நாமும் முட்டாள்களாகிவிடுவோம்.

○ சக்திபாலன், திருச்சி.
? சந்தோஷத்தின் உச்சகட்டத்தில் என்ன செய்வீர்கள்?
! இறைவனை எண்ணுவேன்.

○ ஏ. சுகுமார், காஞ்சிபுரம்.
? பத்திரிகையில் எழுத்தாளராக அறிமுகமாக வழி...?
! இப்படியெல்லாம் கேள்வி மட்டுமே கேட்டுக் கொண்டிராமல் உருப்படியாகவும் ஆரோக்கியமாகவும் சிந்தித்து ரசமான விதத்தில் அதை எழுதுவதுதான்.

○ வி. எஸ். ரவிச்சந்திரன், மதுரை.
? ஒரு லேட்டஸ்ட் அரசியல் ஜோக் சொல்லுங்களேன்?
! புத்தரின் மௌனம் கலையப் போகிறது என்றும் அவர் சாந்தம் சாத்விகத்துடன் தைரியத்தையும் வெளிக்காட்டப் போகிறார் என்றும் பரவலாகப் பேச்சு அடிபடுகிறது.

○ என். விக்னேஷ், சிதம்பரம்.
? கால் வலிக்க இந்த வருடம் அட்மிஷனுக்காக அலைந்திருப்பீரே?
! விரல் வலிக்க டெலிஃபோன் எண்களை டயல் செய்ததோடு சரி. இரண்டு முயற்சிகளில் ஒன்று ஸக்ஸஸ்.

○ ஜி. கே. ராஜகோபாலன், சென்னை–92.
? அ. தி. மு. க.வின் உண்மையான மே(லி)டம் எதுங்க சாரே?
! உங்கள் கேள்வியிலேயே பதில் இருப்பதாக நீங்கள் கருதலாம். நான் ஒப்பவில்லை.

○ எஸ். மோகன், மே.மாம்பலம்.
? ஏ. வி. எம். மின் புதுமைப்பெண் முடிவு சரிதானா?
! அந்த முடிவு காரணமாகத்தானே அவள் புதுமைப்பெண் ஆகிறாள்!

○ எஸ். வில்சன், நாகர்கோயில்.
? இந்தியாவில் மீண்டும் மன்னர் ஆட்சி ஏற்பட வாய்ப்பிருக்கிறதா?
! ''எல்லோரும் இந்நாட்டு மன்னர். ஆனால் சிலர் மட்டும் சக்கரவர்த்திகள்'' என்றான் ஒரு புதுக்கவிஞன். அந்த சக்கரவர்த்திகளின் ஆட்சியே நீடிக்கும்.

○ என். நேசமணி, திருத்தணி.
? ஒரு இந்தியன் காணும் கனவுக்கும் ஒரு ஜப்பானியன் காணும் கனவுக்கும் என்ன வித்தியாசம்?
! ஜப்பானியன் தூக்கத்தில் மட்டும் கனவு காண்கிறான்.

○ டி. ராஜன், ஊரூர் வெளிக்கடை.
? ஒரு பத்திரிகையினால் சாதிக்க முடியாததுஎது?
! சமுதாயத்தை ஒரு கண்ணாடி போல் பிரதிபலிக்கிறது பத்திரிகை. பிரச்னைகளை எடுத்துக் காட்டுவதுடன் பிரச்னைகள் தீர நல்வழியும் கூறுகிறது. அந்தக்கால மன்னர்கள் ஆட்சியில் அமைச்சர்கள் செய்த பணியைச் செய்கிறது பத்திரிகை. கேட்டு நடப்பதும் அலட்சியப்படுத்துவதும் ஆட்சியில் இருப்பவர்களைப் பொறுத்தது. அவர்களைத் தண்டிப்பதும் மன்னிப்பதும் வாக்காளரைப் பொறுத்தது. இதற்கு அதிகமாகப் பத்திரிகையால் எதும் சாதித்து விட முடியாது.

○ பி. எஸ். பரமசிவம், மதுரை–1.
? டிப்ஸ் கொடுத்த அனுபவம் குறித்து...?
! ரேஸ் ஆடும் நண்பருக்கு டிப் கொடுத்தேன். கடைசியாக வர வாங்கிக்கட்டிக் கொண்டேன். ஹோட்டலில் ஸர்வருக்கு டிப் கொடுத்தேன். ''வச்சுக்குங்க ஸார்! பஸ்ஸிலே கண்டக்டர் சில்லறை இல்லேன்னு சொல்லிடப் போறாரு'' என்றார். வீட்டில் மனைவிக்குச் சமையல் டிப் கொடுத்தேன். அன்று இராப் பட்டினி. டிப் கொடுப்பதையே விட்டு விட்டேன்.

○ எஸ். சம்பத்குமார், சென்னை–5.
? பலமான எதிர்க்கட்சிகள் இல்லாதது இந்தியாவுக்கு நல்லதா?
! எதிர்க்கட்சிகள் என்று கூறியபின் அவை பலமாகவும் இருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பது வீண் வேலை. எதிர்க்கட்சி என்று ஒற்றைப்படையில் கூறும் காலம் வரும் போது தான் அது பலமாயிருக்கவும் முடியும். அந்த நிலை உருவாவது தான் இந்தியாவுக்கு நல்லது.

○ ஏ. சுகுமார், காஞ்சிபுரம்.
? கலைஞரின் தற்போதைய லட்சியமென்ன?
! நேற்று ஒரு லட்சியம், இன்று ஒரு லட்சியம், நாளை வேறொன்று என்ற பேச்சு கலைஞரிடம் இல்லை. ஒன்றே கடவுள் என்பது போல் அவருக்கு இருப்பதும் ஒரே மூன்றெழுத்து லட்சியம் தான். ஒரே கடவுள் பல வடிவங்களில் வழிபடப்படுவது போல அவரது லட்சியத்தை அடையும் மார்க்கங்கள் பல வடிவங்களை எடுக்கின்றன.

○ நாருவேலன், மதுரை ★
? எம். ஜி. ஆர். எங்கே போய்க் கொண்டிருக்கிறார்?
! வாஷிங்டன் இர்விங் என்பவர் ஒருகதை எழுதினார். கதாநாயகன் ரிப் வேன் விங்கிள் இருபது வருஷம் தூங்கி விடுவான். எழுந்து பார்த்தால் உலகமே மாறிவிட்டிருக்கும். எனவே நவீன சிந்தனையும் செயல் ஊக்கமும் இல்லாமல் இருப்பவர்களை ரிப்வேன் விங்கிள் என்று அழைக்கும் பழக்கம் ஏற்பட்டது... அது சரி... என்ன கேட்டீர்கள்? எம். ஜி. ஆர். எங்கே போய்க் கொண்டிருக்கிறார் என்றா?

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

நாருவேலன்,
19–B. ஜீவாதெரு.
பெதானியாபுரம்,
மதுரை–625 016.

# பக்தி பத்திரிகைகள் இலவசம்!

எமது ருசிகரமான இனிப்பு வகைகளையோ, அல்லது கார பண்டங்களையோ மூன்று கிலோவுக்கு குறையாமல் வாங்குவோருக்கு கீழ்க்கண்ட பக்திப் பத்திரிகைகளில் ஒன்று ஓராண்டுக்கு இலவசமாக வழங்க ஏற்பாடு செய்துள்ளோம்.

**"ஸ்ரீ நரஸிம்ஹப்ரியா", "ஸ்ரீ காமகோடி பிரதீபம்", "தர்ம சக்கரம்", "வைகறை"**

**இனிப்புகள்:** பாதாம் அல்வா, தூத் அல்வா, கோதுமை அல்வா, சோன்பப்டி, குலோப்ஜாமூன், ரஸமலாய், லட்டு, மைசூர்பாகு, ஜாங்கிரி, சாக்லெட் கேக், மங்களூர் போளி, தேங்காய் போளி, முந்திரி கதலி, பொரிவிளங்காய் உருண்டை முதலியன.

**காரம்:** கைமுறுக்கு, தட்டை, தேன்குழல், சீடை, நவரத்ன மிக்சர், உருளைக்கிழங்கு சிப்ஸ், மசாலாக்கடலை, சமோசா முதலியன.

**திருமண வைபவங்களுக்கு** பருப்புத் தேங்காய், சீர்முறுக்கு, திரட்டுப்பால், கட்டிப் பருப்பு, ஆகியவற்றைத் தயாரித்துத் தருகிறோம்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை-600 020

போன்: 412557

காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி, தேனாம்பேட்டை, சென்னை

## ஹா...ச்சு ஹா...ச்சு நாளே பாழாப் போ...ச்சு

ஜலதோஷம் வாட்டுகிறதா!?

கோல்டரின் அதை விரட்டுகிறது.

CASBC-111-103 TAM

# நெருப்புக்குள் ஈரம்



'என்னதான் இருந்தாலும் நான் இன்னொரு வீட்டுப் பெண்தானே' என்று அம்பிகா சொல்ல, 'என் சிநேகிதன் பொண்ணாயிருந்தா என்னம்மா, நீ எம் பொண்ணுக்கு மேல' என்று தேங்காய் சிதற, 'அதான பார்த்தேன்' என்று மனோரமா ஒரு பக்கம் முகத்தை நிமிர்த்த—

பாத்திர அறிமுகம் நடக்கிறது பாருங்கள் —முழுப்படமும் இப்படியே போய் முடிந்து விடுமோ' என்று சந்தேகம் எழுந்து, வாய் விட்டுக் கேட்கிற அளவுக்கு இழுக்கிறார்கள். பின்னாலேயே ஒரு கோர்ட் ஸீன். அதுவும் புடலங்காய் நீளத்திற்கு.

'பாங்' என்றோமா, 'சுபர்பன்' மின்சார ரயில் மாதிரி பிளாட்ஃபாரத்தைத் தாண்டியவுடன் அறுபதைத் (கி. மீட்டர்) தொட்

---

அதில் ஒன்று பாருங்கள், கிளுகிளுப்பு வரவேண்டும் என்பதற்காகவே இந்த மாதிரி தலைப்பைக் கொடுத்துவிட்டு, அப்புறம் ஹீரோயின் பெயர்தான் அது, அவளுடைய முகூர்த்தம் பற்றிய கதைதான் இது, என்று சொல்லும்போது,

—'அ, அ— டபாய்க்காதீங்கப்பா நம்பளே! மெயின் ஸ்டோரியில வுடற ரீலை வுட பெரிய ரீலுப்பா இது!' — இப்படித்தான் சொல்லத் தோன்றுகிறது.

விடுங்கள், அது கிடக்கிறது கண்டைக்காய் சமாச்சாரம். நிஜமாகவே கதைக்கு வருவோம்.

ஒருவன், ஒருத்தியைக் காதலிக்கிறான். அவளும் அவனைக் காதலிக்கிறாள் இடைவேளை வரை. அப்புறம் ஏதோ ஒரு அயல் தேசத்திலிருந்து அத்தைப் பையன் வந்து, கிணற்று நீரை ஆற்று வெள்ளம் அடித்துக் கொண்டு போய் விடாமல் இருப்பதற்காக, சிண்டு முடித்து விட்டு — காதல், மோதல் ஆகிறது. அப்புறம் இருதய நோய் விஷயம் உருவாகி, கடைசியில் அதுவே விஷமாக மாறி — ஹீரோவும், ஹீரோயினும் ரோமியோ — ஜூலியட், லைலா—மஜ்னு, அம்பிகாபதி — அமராவதி வரிசையில் சேர்ந்து விடுகிறார்கள். இது ஒரு கதை-- இதற்கு ஒரு ப்ரீப்ரியா என்று முகததைச் சுளிப்பதற்கு முன்னால்—

மோகன் அண்ட் கம்பெனி, (மனோகர், ஜனகராஜ்), மனோரமா அண்ட் கம்பெனி (எஸ். எஸ். சந்திரன், தவக்களை) ஆரம்ப ஆட்டிகளைப் பற்றிக் குறிப்பிட்டாகவேண்டும். கேலியும், கிண்டலும், எள்ளலும் துள்ளலுமாய், புன்னகை மாற வைக்காத ஆரம்பம்.

காலடி மண்ணும், கட்டை எறும்பும், உடைந்த சிகரெட் பீஸோட்டும் மோகனும்! முன் பாதியில் நன்றாகவே வழியத் தெரிந்திருக்கிறது இவருக்கு. (காதலுக்கு இது தான் அடிஷனல் க்வாலிஃபிகேஷனோ!) அதுவும் அந்த முதல் நாள் டயம் கேட்டதற்கு மறுநாள் சுவாரியமாய்ப் போய்நின்று 'டயம் சொல்லட்டுமா' என்று பர்மிஷன் வாங்கிக் கொண்டு, அப்புறம் நின்று போன வாட்சைச் சபித்துக் கொண்டு — ப்ச் ப்ச், ப்ச் — என்ன பரிதாபம்! என்ன பரிதாபம்!

'மழையே என் மீது தூவாதே' பாடல் காட்சி!... என்ன ட்ரெஸ்! என்ன மழை! என்ன நனைதல்! என்ன உரசல்! அப்படி ஒரு கிளுகிளுப்பு இந்தப் பாட்டில் இருக்கும் போது, எதற்கு அனாவசியமாய் அந்த இடைபெருத்த ஜெயமாலினிடான்ஸ்?

மௌனமே, மழையே, வஞ்சிக்கொடி— எப்போதோ, எங்கேயோ கேட்ட உணர்வு மனத்தில் மிதந்தாலும் கூட, அந்த மூன்று பாடல்களும், தேன் தடவின இனிமை! கீப் இட் அப் சங்கர்—கணேஷ்.

''ஒரு ஆம்பிளே ஏமாத்திட்டா, ஏமாத்திட்டான் — ஏமாத்திட்டான்னு கத்தறீங்களே, பொம்பளேஏமாத்திட்டா?'' —தியேட்டரில் விசில் சத்தம் காதைக் கிழிக்கிறது இந்த வசனத்திற்கு. வசனம் எழுதிய இளைகர் இந்த வரிக்கு மட்டும் கைத்தட்டல் பெற்றால் போதுமா என்ன?

டோமா என்று இருக்க வேண்டாம்? இப்படியா — இரட்டைப் புகை இன்ஜின் சரக்கு ரயில் மாதிரி!

ஆக்ஷன் என்று ஒன்று வருகிறதென்றால் முதுகைக் காட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் 'பாபா' தியாகராஜனை இன்ட்ரட்யூஸ் பண்ணின பிற்பாடுதான்.

அதுசரி, தியாகராஜன் எதற்காக டெரர் பாபா ஆனார். கொள்ளையடித்தாரா, இல்லீகல்லா பண்ணினாரா — இதையெல்லாம் சொல்லாமல் வெறும் 'பாபா' என்றால் மட்டும் போலீஸுக்குத் தண்டுவடத்தில் ஜுரம் பிடிக்குமா என்ன?

மலையூருக்குப் பின்னால், மூக்கனை எதிர் பார்த்துக் கூட்டம் காத்துக் கிடக்கிறது என்று நினைத்துக் கொண்டு ஒரு 'பாபா'வை உருவாக்கியிருக்கிறார்கள். இந்த பாபா வெறும் பாப்பாதான்.

கதைப் பிரகாரம் பரமசாது பரமுவின் முறைப்பெண் வேறு ஒருவனைக் காதலிக்க, அந்த ஒருவன் இவளைக் கைவிட, பரமு அந்தப் பையனைத் தட்டிக் கேட்க, (அந்த முதலாளியின் பையன் அந்தத் தட்டலிலேயே 'அவுட்' என்று தெரிவது ஒரு நல்ல திருப்பம்) அவன் இறந்து போக, முறைப் பெண் மானத்தைக் காப்பாற்ற பரமு ஜெயிலுக்குப் போகிறான். அப்புறம் வெளியே வருகிறான். அப்படி வந்தவன் ஒரு வக்கீல் அம்மாவைக் காப்பாற்றுகிறான், சில சமூக விரோதிகளிடமிருந்து. அதனால் அந்தவக்கீல் பாத்திரம் இந்தப் பாபாவை உத்தமன் என்று சொல்ல வக்கீலின் முறை மாப்பிள்ளை எஸ். பி. கார்த்திக் அதை மறுக்க -மோதல்.

கடைசியில் பரமு என்னும் பாபா (பாபா என்னும் பரமு) உயிர் துறக்கும்போது எல்லோரும் திருந்தி பரமுவைத் தெய்வமாகக் கருதிக் கன்னத்தில் போட்டுக் கொள்கிறார்கள்.

இந்த மாதிரியான ஒரு உளுத்த கதையை வைத்துக் கொண்டு, யார்தான் என்ன செய்ய முடியும்?

அதெப்படி — அம்பிகாவும், பாபா தியாகராஜனும் சந்திக்கும் போதெல்லாம்போலீஸ் ராஜீவிற்கு மூக்கில் வியர்க்கிறது. மனிதர் நேராய் ஸ்பாட்டில் ஆஜராகி விடுவார். கூடவே கோட்டையும் விட்டுவிடுவார்.

ஜெயிலர் செந்தாமரை நல்ல மிடுக்கு. 'நீ சொல்றதையெல்லாம் பார்த்தா நான் என்னவோ மகாத்மா காந்தியை ஜெயில்ல போட்ட மாதிரி இருக்கு' — வாழைப்பழத்தில் ஊசி டைப் வசனம். ஒரு எள்ளலுடன் அதைச் செந்தாமரை டெலிவர் பண்ணுகிற விதமும் தனி அழகுதான்.

யார் அந்தப் பொடியன்?

பாபாவைப் பார்த்துப் பிடித்துப்போய்ப் பழகியவுடன் பாபாவின் தாடி மீசையைப் பார்த்துக் கேட்கிற முதல் கேள்வி:

'ரொம்பப் பிடிக்குது. எனக்கும் இதை வெச்சி உடறியா?' தன்னிச்சையாய்ப் புன் முறுவல் பூக்கிறது.

இளையராஜாவாவது இன்னும் உழைத்திருக்கலாம்.

ஈரவிறகு — நனைந்த தீப்பெட்டி: வெறும் புகைச்சல்தான்!

---

இடைவேளை வரை அலுப்புத் தட்டாமல் கதையைக் கொண்டு போன டைரக்டர் ஸ்ரீப்ரியாவைப் பிடிக்கிறது: பொய் சொன்ன ஹீரோவிடம் ஏமாந்த ஹீரோயின் கோயில் சன்னதியில் பொருமும் போது, பின்னணியில் சன்னமாக 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்' பாடலை இழைய விட்டிருக்கும் புத்திசாலி ஸ்ரீப்ரியாவைப் பிடிக்கிறது: பிரிப்ரியாய்க் கலைந்த சுருள் முடியும், வெள்ளைக் கூடைத் தொப்பியும், மூக்குக்குக் கீழே இறங்கின கண்ணாடியும், வாத்து நடையும், தேவையில்லாத கண்ணடித்தலும், எரிச்சல் வரவழைக்கிற கீச்சுக் குரலும் கொண்ட திருஷ்டிப் பரிகார ஸ்ரீப்ரியாவைத்தான் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

-ஜெயமன்மதன்

## சாந்தி முகூர்த்தம்



ஏகோபித்த எதிர்ப்பு

# மாணவர்களுக்கு அநீதி

ரீ-வேல்யுவேஷன் என்கிற தேர்வு விடைத்தாளை மறுபடி மதிப்பீடு செய்கிற முறையைச் சென்னைப் பல்கலைக் கழகம் இந்த ஆண்டு முதல் கைவிட்டு விட்டதாய் அறிவித்துள்ளது. இந்த முடிவு பற்றி மூன்று கல்லூரி மாணவ, மாணவியர் கருத்து தெரிவிக்கிறார்கள்:

● நன்றாகப் பரீட்சை எழுதிய மாணவன், நிறைய மார்க் எதிர்பார்க்கிறான்.



○ ஆர். காயத்ரி



○ மௌலீஸ்வரன்

எதிர்பார்க்கிற மார்க்குக்கு மிகக் குறைவாய் வாங்கினால், நூறு ரூபாய்ப்பணம் கட்டி, ரீ-வேல்யுவேஷனுக்கு விண்ணப்பிக்கிறான். எதிர்பார்த்தபடியே, மார்க் அதிகரித்தால் கூட, பாதிப் பணம் தான் திருப்பித் தரப்படும். இப்படிப்பட்ட சூழ்நிலையில் யாராவது பணத்தை வீணடிப்பார்களா? நிச்சயமாக ஏதோ தவறு நேர்ந்திருக்கிறது என்று தோன்றும் போது தான் விண்ணப்பிப்பார்கள். அவ்வாறிருக்க இந்த முடிவு மாணவச் சமுதாயத்துக்கு இழைக்கப்படும் அநீதி என்றே சொல்லவேண்டும்.

● ஏதோ அட்மினிஸ்டிரேஷன் பிரச்சினை காரணமாய் இந்த முடிவு எடுத்திருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அட்மினிஸ்ட்ரேஷன் பிரச்சினை எதில்தான் இல்லை? இப்படியே போனால், இதையே காரணம் காட்டி, பரீட்சைகளைக் கூட நடத்தாமல் இருப்பார்களோ? . ஒவ்வொருவரும் இதேபோல் ரீ-வேல்யுவேஷனுக்கு விண்ணப்பித்தால் என்ன ஆவது என்கிறார்கள். எல்லோரும் விண்ணப்பித்தால் அப்படி சந்தேகப்படும் வகையில் ஒரு தேர்வு நடத்தால் ஒரு சூழ்நிலை உருவானால் அதுவே பல்கலைக் கழகத்தினர் அவமானப்பட வேண்டிய ஒரு விஷயம்.

● விடைத் தாள்களைத் திருத்தி மார்க் போடுவதில் தவறே ஏற்பட முடியாது என்று கூறுவதற்கில்லை. கம்ப்யூட்டர்கள் மூலம் மார்க் லிஸ்ட் தயாரிக்கும் போதும் தவறுகள் நிகழ வாய்ப்புண்டு. ரீ-வேல்யு வேஷனுக்கு விண்ணப்பிப்பவர்கள் எல்லாம் பெரும் பாதும் இஞ்ஜினீரிங், மெடிகல், இவற்றுக்கு விண்ணப்பிப்பவர்களே. இப்படிப் பட்டவர்கள், மறு மதிப் பீட்டுக்கு விண்ணப்பித்து, மார்க் வருவதற்குள், தொழிற் கல்விக்கு விண்ணப்பிக்கக் கடைசி நாள் வந்து விடும். மறு மதிப்பீட்டில், அதிக மார்க் வந்தாலும் அந்த வருடம் ஸீட் வாங்க முடியாது. ஆனால் நன்றாக எழுதினேம் முதல் தடவையில் இல்லா விட்டாலும், ரீ-வேல்யு வேஷனிலாவது எழுதியதற்கு உரிய மார்க் கிடைத்ததே என்ற திருப்தியாவது



○ ஏ. கீதா

ஏற்படும். அது கூடக் கிடைக்காமல் செய்வது பெரிய அநீதி.

கருத்து தெரிவித்த மாணவ மாணவியர்:

ஆர். காயத்ரி
(மீனாட்சி கல்லூரி).

வீ. ஸீ. மௌலீஸ்வரன்
(டி.பி.ஜெயின் கல்லூரி).

ஏ. கீதா
(எஸ்.ஐ.ஈ.டி. கல்லூரி).

தொகுப்பு: ஜூலி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani

Editor: K. Rajendran

"தரத்தோடு விலையையும் எம் மாதிரி நோட்டம் பார்த்து வாங்குங்க, கெட்டிக்காரி நீங்கதான்"







# "நியூட்ரமுல் தான் என் கைராசி."

"கண்ணை மூடிக்கிட்டு முடிவு பண்றவ நான் இல்லே. கண்முழிப்பா கவனிக்கறவளுக்குக் கிடைக்குது சகாய விலையிலே தரமான பண்டம்-- இதோ எனக்கு நியூட்ராமுல். ISI தரம் இருந்தாகணும், இருக்கா பார்ப்பேன். நியூட்ராமுல் ஒண்ணுக்குத் தானே அது இருக்கு, வேறெந்த கோக்கோ மால்ட் பானத்துக்கும் கிடையாதே. அதுவும், குடும்ப மனசுப்போல வாங்கக் குடுத்து வெச்சவ நான், எங்க வீட்டுலே கண்டிப்பா நியூட்ராமுல் தான் வேணும்".

"விளம்பரக் கதைகள் எல்லாம் என் கண்ணுலே மண்ணைத் தூவும்படி விடமாட்டேன். எதையுமே நான் நேரிலே பார்த்துத்தான் வாங்குவேன்".

| | |
|---|---|
| நியூட்ராமுல் | ரூ. 13.34 |
| போர்ன்விடா | ரூ. 20.48 |
| மால்டோவா | ரூ. 20.45 |
| பூஸ்ட் | ரூ. 21.57 |

மார்ச் '84 விலைப்படி 500 கி. கார்ட்போர்டு பெட்டிகளின் பேக்குகளுக்கான அதிகபட்ச உச்ச விலைகள். வரிகள் தனி.




daCunha/GCM/109(A)/84/TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

## "என் பிள்ளை கஷ்டப்படுவதைப் பார்க்க சகிக்கலை எனக்கு. பள்ளியிலிருந்து வீட்டுக்கு வரும்போது மழையிலே முழுவதும் நனைந்துவிட்டான். இப்ப என்னடான்னு பாழாய்ப்போன ஜலதோஷம் பிடித்துக் கொண்டு விட்டது. அவன் எதுவும் செய்ய முடியாமல் தவிக்கிறான் பாவம்"!



இந்த நிலையிலே அவனைப் பார்த்து நான் பயந்து போனேன்—அவன் தும்மிக் கொண்டே இருந்தான். மூக்கிலே சளி, உடல் வலி வேறு, தாய் மனசு கேக்குமா? உடனே ஈரம் போக துண்டாலே அவனைத் தொடைத்து, துணியை மாத்தி அவனுடைய மூக்கு, தொண்டை, மார்பு, முதுகிலேயும் விக்ஸ் வேப்போரப்பை நல்லாத் தடவி, அவனை அப்படியே படுக்க வைத்தேன். அன்னைக்கு ராத்திரி பூரா நிம்மதியாகத் தூங்கினான். அடுத்த நாள் காலைலே எழுந்தப்ப ஜலதோஷமெல்லாம் போயிட்டுது. சுறுசுறுப்பா பள்ளிக்குப் போகத் தயாராயிட்டான். எங்களுக்கெல்லாம் சந்தோஷம். இதுக்கெல்லாம் விக்ஸுக்குத்தான் நன்றி சொல்லணும்! இனிமே எனக்குக் கவலையே இல்லை. வீட்டிலே விக்ஸ் வேப்போரப் பாட்டிலை தயாரா வைத்திருக்கிறேன். அவனுக்கு ஜலதோஷம் வரும்போதெல்லாம் ரொம்ப உதவியாய் இருக்கு.''

---

### விக்ஸ் காட்டும் பாசம் உங்கள் பாசத்தைப்போல

விக்ஸ் வேப்போரப் ஜலதோஷ அறிகுறிகளை உடனே போக்குவதற்கு இரண்டு வழிகளில் செயல்புரிகிறது. முதலாவதாக அதன் விஞ்ஞான முறையில் மருந்து கலந்த ஆவி அடைபட்ட மூக்கைத் திறந்துவிடுகிறது. அதனால் நீங்கள் தாராளமாக சுவாசிக்கிறீர்கள். இரண்டாவதாக தசைவலியைப் போக்கி இதமளிக்கிறது. அதனால்தான் அது குடும்பத்தினர் எல்லோருக்கும் நம்பகமான ஜலதோஷ நிவாரணி.




## விக்ஸ்வேப்போரப்

சுவாச நிவாரணம் அளிக்கிறது
நிவாரண அனுபவத்தை
உணரவைக்கிறது

RHL-20/84